# ஸ்ரீ குமரகுருபரர்





மறைஞானசம்பந்தர்



ஆவணி 1 (17—8—81)

தொகுதி 3 பகுதி 11

சிவ சிவ

# 'ஸ்ரீ குமரகுருபரர்'

## ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

அருளாணையின் வண்ணம்

வெளிவரும் சமய - இலக்கியத் திங்கள் இதழ்.



அட்டையில் :

மறைஞானசம்பந்தர்
திருவுருவம்




# ஸ்ரீ குமரகுருபரர்

தொகுதி 3] ஆவணி [பகுதி 1]

மயில் ஆடும் — அதைக் கவிஞர்கள் வருணிப்பார்கள். மயில் ஒதுங்கி ஒதுங்கி நடக்கும். அந்தச் சாயலைப் பாவலர்கள் பாராட்டுவார்கள். ஒரு மயில் ஒய்ந்து அமர்ந்திருக்கிறது. அதை வருணிக்கிறார் ஸ்ரீ குமரகுருபரர். ஏன்? அதில் என்ன நயம் இருக்கிறது? — ஸ்ரீ ல ஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் அருள்பழுத்த கனிச்சுவையுள் விளக்கியருளுகிறார்கள்.

சிவஞானமுனிவர் கூறும் சாஸ்திர உவமைகளை எடுத்துக் கொண்டு அதன் வழியாகச் சித்தாந்ததத்துவங்களை எளிமையாக விளக்குகிறார் மதுரை திரு. தா. குருசாமி அவர்கள்.

வீட்டில் ஒய்வாக உட்கார்ந்திருக்கும்போது பழைய தாள்களைப் புரட்டுவோருக்கு இருபது வருஷங்களுக்கு முன் மளிகைக் கடையில் சாமான்கள் வாங்கிய ரசீது கண்ணுக்குத் தெரியும். அதில் குறிக்கப்பட்டிருக்கும் விலைகள் ஓர் ஏக்கத்துடன் சிரிப்பை உண்டாக்கும். திருவெள்விகுடியில் இருக்கும் சில கல்வெட்டுச்செய்திகளும் ஏக்கமும் வேடிக்கையும் கலந்த உணர்வுகளைக் கொடுக்கின்றன. அவற்றைத் திருத்தல யாத்திரைப்பகுதியுள் வித்துவான் திரு. பொன். முருகையன் அவர்கள் விளக்குகிறார்கள்.

பண் நட்டராகம் - அதுபற்றித் திரு. கல்யாணசுந்தர தேசிகர் தரும் விளக்கம், நமக்கு லாபம்.

'கொன்றன்ன இன்னா செயினும்' என்ற குறளைப் பல்வேறு கோணங்களில் நின்று சிந்திக்கிறார், புலவர் திரு. முருகு. சுவாமிநாதன்.

மற்றும் வழக்கமான அம்சங்கள்; சென்ற இதழ்த் தொடர்ச்சிகள்.

அடுத்த விடையரங்கத்திற்கு இதோ கீழே வினா. உங்கள் விடைகளும் இணையட்டுமே!

கி. ஆ—ர்.

---

அடுத்த இதழின் விடையரங்கத்திற்கு வினா:-

சம்பந்தர்க்குத் தானே நினைத்தும், சுந்தரர்க்கு அவர் கேட்ட அளவிலும், அப்பர்க்கு அவர் கேட்ட பின் தாமதித்தும் பேறுகளை நல்கியமையில் காணப்படும் வேறுபாட்டிற்குக் காரணமென்னை? அகிலம் படைத்தருளும் அண்ணலின் அருள்வெளிப்பாட்டில் ஏற்றத் தாழ்வுகள் ஏன்?

மெய். சந்திரசேகரன், பி. லிட்., (எம். ஏ.)

# மறைஞான சம்பந்தர்

தா. ம. வெள்ளைவாரணம்.

மறைஞான சம்பந்தர் தென்னார்க்காடு மாவட்டத்தில் பெண்ணாகடம் என்ற ஊரில் சுமார்த்த அந்தணர் மரபில் பராசரமுனிவர் கோத்திரத்தில் பிறந்தவர். இவர் நான்கு வேதங்களையும் நன்கு கற்றுத் தேர்ந்தமையால் மறைஞான சம்பந்தர் என்று அழைக்கப் பட்டார். அருணந்தி சிவாசாரியாரிடம் தீக்கைபெற்ற அவரது மாணாக்கர்களில் முதல்வராக விளங்கினார். அருணந்தி சிவத்துக்குப் பின் சந்தான ஆசாரியர் பரம்பரையில் மூன்றாமவராகத் திகழ்ந்தார். ஒரு சமயம் சிதம்பரத்தில் ஒரு வீட்டுத் திண்ணையில் தமது மாணாக்கர்களுடன் அமர்ந்திருந்தார். அப்போது உமாபதிசிவம் நடராசர் பூசை முடித்துப் பல்லக்கில் ஏறித் தீவட்டி முதலிய விருதுகளுடன் வீதியில் சென்றார். அவரது பக்குவ நிலையறிந்து மறைஞான சம்பந்தர், ''பட்ட கட்டையில் பகல்குருடு போகிறது பாருங்கள்'' என்று உரக்கக் கூறினார். அதனைக் கேட்ட உமாபதிசிவம் பல்லக்கை விட்டிறங்கி வந்து மறைஞான சம்பந்தரை வணங்கித் ''தாங்கள் கூறியதன் உட்கருத்தை உணர்த்தியருள்க'' என வேண்டினார். ''பட்டமரத்தால் செய்த பல்லக்கில் பகலில் தீவட்டியுடன் நீர் செல்கிறீர்'' என்பது வெளிப்படைப் பொருள். ''நடராஜர் பூசை முதலிய நற்காரியங்களால் உமது தேகம், வினைஎலாம் பட்டுப்போன கட்டையாகிப் பக்குவம் பெற்றுவிட்டது. ஆனால் உமது உயிர் மட்டும் சித்தாந்த ஞானம் பெறாமையால் பெருங் குருடாயிருக்கிறது'' என்பது உள்ளீட்டுப் பொருள் என்று மறைஞான சம்பந்தர் கூறினார். உடனே உமாபதிசிவம் அடியற்ற மரம்போல வீழ்ந்து வணங்கித் தமக்கு ஞானம் அருளவேண்டினார். மறைஞான சம்பந்தர் உமாபதி சிவத்தை மாணாக்கராக ஏற்றுச் சித்தாந்த ஞானத்தை உணர்த்திப் பல சோதனைகளைச் செய்த பின் தீட்சை செய்வித்தார். மற்றும் மறைஞான சம்பந்தரிடம் அருள் நமச்சிவாயர் முதலியோர் தீட்சை பெற்று மாணவர்களாக இருந்தார்கள். மறைஞானசம்பந்தர் சிதம்பரத்தில் திருக்களாஞ்சேரி என்ற இடத்தில் சிலகாலம் தங்கி இருந்தார். சதமணிக்கோவை என்ற நூலை இயற்றினார். இறுதியாக ஆவணி பாதம் உத்திர நட்சத்திரத்தில இறைவன் திருவடியில் ஒன்றினார். இவரது காலம் 14-ம் நூற்றாண்டு.

---

சென்ற ஆடி இதழில் திரு. கிரிதாரி பிரசாத் அவர்களால் மதிப்புரை எழுதப்பெற்ற திருக்குறள் ஒரு பொதுமறை என்ற நூலின் ஆசிரியர். திரு. கோ. வன்மீகநாதன், நூல் கிடைக்குமிடம்:



பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணியவர்.

# அருள் பழுத்த கனிச்சுவை

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி
முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்
அதிபர், ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள்.

மதுரையைச் சுற்றியுள்ள சோலைகளின் எழிலை ஸ்ரீகுமர குருபர சுவாமிகள் தொடர்ந்து வருணிக்கிறார்.

ஒரு மயில். அது ஒரு புன்னை மரத்தின் கீழ் அசதியுடன் ஓய்வெடுத்துக் கொள்கிறது. அந்தக் காட்சியை. 'அழகான காட்சி' என்று வருணிக்கிறார் நம் சுவாமிகள்.

இலக்கியச் சுவைஞர்களுக்கு இஃது ஆச்சர்யமாக இருக்கும். ஆடும் மயிலை அதன் ஆட்டத்தை, குறைந்தபட்சம் ஒதுங்கி ஒதுங்கி நடக்கும் மயிலின் ஒயிலை, அதாவது சாயலை, வருணிக்கலாம். அது கவிஞர்கள் செய்யும் காரியம். அதை விட்டு, ஓய்ந்துபோய் அமர்ந்த மயிலை வருணிக்கப் புறப் பட்டாரே; அது ஆச்சர்யமில்லையா? அதுமட்டுமன்று. இந்தச் சோம்பேறி மயிலை 'எழில் நலம்' கொண்டது என்கிறாரே!

இந்த வருணனையிலேயும் உலகுக்குச் சில நியாயங்களைத் தெளிவு செய்கிறார் ஸ்ரீ சுவாமிகள்.

உலகில் மனிதர்களுக்குப் பெரும்பாலும் கண்கள் இருக் கின்றன. மனிதர்கள் பார்க்கிறார்கள். எதைப்பார்க்கிறார்கள்? பார்க்க முடிந்ததைப் பார்க்கிறார்கள்; பொருள்களைப் பார்க் கிறார்கள். இந்தக் கண்களினால் பொருள்களைப் பார்க்க முடியுமே தவிரப் பொருள்களூடே பொதிந்து கிடக்கும்

உண்மைத் தன்மைகளைக் காண முடியாது. ஆகையினால் தான் திருவள்ளுவரும் உறுப்பாகிய கண்ணைப்பெற்றவர்களை யெல்லாம் கண்ணுடையவர் என்று ஒத்துக்கொள்ளவில்லை. பொருள்களின் உண்மைத் தன்மைகளைக் காணவல்ல அறிவுக் கண் பெற்றவர்களையே கண்ணுடையோர் என்று உடன்படுகிறார்.

"கண்ணுடையர் என்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்".

இது வள்ளுவம்.

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் திருவள்ளுவரை விஞ்சுகிறார்.

கல்லாதவன் கண்ணை - பொருளின் மெய்ம்மை உணர ஆற்றலற்றவனின் கண்ணைப் புண் என்கிறார் திருவள்ளுவர். அதே திருவள்ளுவர்தான் 'எண்ணென்ப ஏனை எழுத்தென்ப, இவ்விரண்டும் கண்என்ப' என்றார் ஆகப் பொருளின் மெய்ம்மை காணும் நோக்குப்பெறக் கல்வி தேவை என்பது உறுதியாகிறது. அந்த உணர்வு இல்லாதவனின் கண் 'புண்'என்பது வள்ளுவரின் முடிவு. அல்லது வசையுரை என்று சொல்லலாம்.

முகத்திற்கு அழகு தருவதே கண்தான். "கண்ணிற் சிறந்த உறுப்பில்லை". கல்லாதவனின் கண் மட்டும் அழகாக இல்லையா என்ன? அதை அசிங்கமான புண்ணுக்கு ஒப்பாகச் சொல்லலாமா?

ஸ்ரீ குமரகுருபரர், அவர்களின் கண்களைப் புண்கள் என்று சொல்லவில்லை. 'மயில் தோகையில் உள்ள கண்களைப் போல' என்கிறார்.

மயில் தோகையில் உள்ள கண்கள் அழகானவை. மிகுந்த கவர்ச்சியானவை. மென்மையானவை. விரிந்தவை. மயக்குபவை. கண்களுக்கு உள்ள லட்சணங்கள் கொண்டிருந்தாலும் அவற்றால் பார்க்க முடியாது. விரியும், புரியாது!

'மெய்ப்புலன் நோக்கார்
கண்புலன் கடுப்ப'

[1. புலன் - நுகர்ச்சிக்குக் காரணமாகிய உணர்வுகள்; 2. புலன் - பார்வை. கடுப்ப - போல]

இந்த உவமை 'மஞ்ஞை (மயில்) இமையா வறுங்கண்' என்பதனோடு சேர்கிறது. எனவேதான் கல்லார் கண்ணை மயில்தோகைக் கண்ணாக ஒப்புமை செய்து ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளிச் செய்தார்.

மயிலின் கண்கள் தேவர்களின் கண்களைப் போல இமையாக் கண்கள். காணுதலும் செய்யாமையினால் வறும் கண்கள். மயிலின் தோகை விரிகிறது. குவிகிறது. அக்காட்சி இமைப்பது போல இருக்கிறது. மயிலின் கழுத்தில் அழகான கீற்றுத் தெரிகிறது. அந்தக் காட்சி மாலை இட்டது போலத் தெரிகிறது.

ஆண்மயிலுக்குத்தான் தோகை உண்டு. ஆண்கள் அணிந்து கொள்ளும் மாலையைத்தான் தார் என்று சொல்வார்கள்.

இலையறப் பூத்த
சுதைமலர்ப் புன்னையின்
மெய்ப்புலன் நோக்கார்
கட்புலன் கடுப்ப
இமையா வறுங்கண்
இமைத்தபைங் கூந்தல்
பசுந்தார் மஞ்ஞை
அசைத்தமர் தோற்றம்

[அற - இல்லாதபடியாக; சுதைமலர் - வெண்ணிறமுடையமலர்; வறும் கண் - வறியகண். அதாவது பீலிக்கண்; கூந்தல் - தோகை; தார் - ஆண்கள் அணியும் மாலை; மஞ்ஞை - மயில்; அசைத்து - சோம்பலுற்று]

புன்னை மரத்தின் கீழே ஒரு மயில் இருக்கிறது; அது இவ்வாறு இருக்கிறது என்று வருணித்த ஸ்ரீ சுவாமிகள்,

'இந்த மயிலின் காட்சி கற்பகச் சோலையில் இந்திரன் அமர்ந்துள்ள காட்சியைப் போன்றது' என்று விளக்கியருளுகிறார்கள்.

கற்பகச் சோலை.கற்பக மலரிதழ்கள் தங்கநிறம் கொண்டவை. தேவலோக மலர்களில் வண்டுகள் மொய்ப்பதில்லை. இந்திரனின் யானை வெள்ளைநிறமுடைய ஐராவதம். அது பக்கத்திலே நிற்கிறது. ஆயிரம் கண்களைக் கொண்ட இந்திரன் கற்பகச் சோலையில் அழகுற அமர்ந்துள்ளான்.

மதுரையைச் சூழ்ந்த சோலையில் மயில் அமர்ந்த காட்சி கற்பகச் சோலையில் இந்திரன் அமர்ந்த காட்சியை நினைவு செய்கிறது. இங்கே வேங்கை மலர்கள் கீழே உதிர்ந்து தங்கத் தரையாக உள்ளது. அந்தப் பூமியே தங்கம். இங்கே வேங்கை மலர்களை வண்டு மொய்க்காது; தெய்வலோக மலர்களையும் வண்டு மொய்க்காது. இந்திரனின் ஐராவத யானை வெள்ளையானது. இலையில்லாமல் வெள்ளைப் பூக்கள் பூத்திருக்கும் புன்னை, ஐராவத யானையைப் போல உள்ளது. இந்திரனுக்கு ஆயிரம் கண்கள்;மயிலுக்கு தோகைக் கண்கள் பல. தேவர்தலைவன் ஆகையினாலே இந்திரனின் கண்கள் இமையாக்கண்கள்;மயிலின் தோகைக் கண்களும் இமையாக் கண்களே. மயில் ஆண் மயில். இந்திரனும் தான். மயில் கழுத்தில் தார் உள்ளது. இந்திரனும் தார் அணிந்துள்ளான்.

இவ்வாறு எந்தக் கோணத்திலும் முற்றப் பொருத்தமான உவமை செய்கிறார்.

சோலை, மயில், புன்னை, மலர்கள் இவையெல்லாம் ஒரு ஞான இலக்கியத்தில் ஏன் வருகிறது?

நாம் முன்னமேயே குறிப்பிட்டோம். நடனமாடும் மயிலை ஸ்ரீ சுவாமிகள் வருணிக்கவில்லை என்று.

மதுரையில் உள்ள சோலையில் மயிலைக் கண்டவுடனே நம் சுவாமிகளுக்கு, சாப விமோசனம் பெற வந்த இந்திரன் நினைவு வருகிறது. வெள்ளை மலர் பூத்த புன்னை மரத்தைப் பார்த்தவுடன் சாப விமோசனம் பெற ஆலவாய்க்கு வந்த வெள்ளை யானையின் நினைவு வருகிறது.

இந்திரனின் பழி தீர்த்ததும், வெள்ளை யானையின் சாபம் தீர்த்ததும் ஆலவாய்ச் சொக்கனின் திருவிளையாடல்கள். எல்லாப் பொருள்களிலேயும் இறைவனின் திருவிளையாடல் களைக் காணும் நம் சுவாமிகளின் 'இறைக் காதல்' நுணுக்க மானதாகும்.

பொன்துணர் பொதுளிய கற்பகப் பொதும்பர்
பொறிவண்டு உண்ணு நறுமலர் தூற்றப்
பாடல் சான்ற கோடுபல தாங்கிக்
கண்பல படைத்த கார்முகில் வண்ணத்து
இந்திரன் பொலியும் எழில்நலம் காட்டும்
தண்பணை உடுத்த தமிழ்ப்பெரும் கூடல்.

[துணர் - பூவிதழ்; பொதுளிய-செறிந்த; பொதும்பர்-சோலை; பொறி-புள்ளி; கோடு-கொப்பு; மால்-பெரிய; களிறு-யானை; பணை-சோலை]

—சிவ சிவ

# ஆலய பூஜை படிக்காசு நிதிக்கு

## நன்கொடையளித்த அன்பர்கள் விபரம்

| | | |
|---|---|---|
| | 6—7—81 முடிய கூடுதல் | ரூ. 12364-00 |
| 1. | திருநெல்வேலி திரு. T.V. சங்கரக்குமாரு அவர்கள் 5+5= | 10 00 |
| 2. | கடலூர் திரு. A. தண்டபாணி செட்டியார் அவர்கள் | 10-00 |
| 3. | அரியலூர் அன்பர் | 108–00 |
| 4. | விழுப்புரம் திரு. P. நவநீதகிருஷ்ணன் அவர்கள் | 5–00 |
| 5. | சென்னை திரு. தி. சிவகுமார் அவர்கள் | 10-00 |
| 6. | சென்னை திரு. தி. நிர்மலா அவர்கள் | 10-00 |
| 7. | வெள்ளக்கோயில் திரு. ரா.கி.சுவாமிநாதன் அவர்கள் | 5-00 |
| 8. | திருச்செங்கோடு திரு. தி. அ. மாரிமுத்து அவர்கள் | 20-00 |
| 9. | திருப்பனந்தாள் போஸ்டாபீஸ் காலனி, திருவிளக்கு வழிபாட்டுக்கழக உறுப்பினர் R. லட்சுமி அம்மாள்அவர்கள் | 5-00 |
| 10. | ஈரோடு அருள்நெறித் திருக்கூட்ட அன்பர் | 25–00 |
| 11. | மன்னார்குடி R. சியாமளா அவர்கள் | 5-00 |
| 12. | கதிராமங்கலம் திரு. K. R. கோபாலய்யர் அவர்கள் | 101-00 |
| | 3—8—81 வரை கூடுதல் | ரூ. 12,678–00 |

உ

சிவ சிவ

# திருச்சிராப்பள்ளியில்

# இன்னிசைத் திருமுறை விழா

(ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நினைவு ஸ்ரீதாயுமான ஈசர் நிதி)

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்

**ஸ்ரீலஸ்ரீ காசிவாசி**

**முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்**

அவர்களின் அருளாணையின் வண்ணம் நடத்தப்பெறுவது.

துன்மதி ஆண்டு ஆவணித்திங்கள் 23ஆம் நாள் 8—9—81

ஆவணி மூலம் செவ்வாய்க்கிழமை இரவு 8 மணிக்கு

**ஸ்ரீ தாயுமானவர் சன்னதியில் தொடங்கப்பெறும்.**

திருமுறைவாணர்கள் :

1. தமிழ்மறை இன்னிசைப் பண்மணிகள்
திரு. T. M. விசுவலிங்கம் சபாபதி சகோதரர்கள்
திருவாவடுதுறை.
2. தேவார இசைமணி,
திரு. S. முத்துக் கந்தசாமி தேசிகர்
ஸ்ரீ காசிமடம் கட்டளை ஓதுவார், திருச்சிராப்பள்ளி.
3. தேவார இசைமணி
திரு. P. ராமச்சந்திர ஓதுவார், விருத்தாசலம்.
4. சங்கீத பூஷணம்
திரு. S. தண்டபாணி தேசிகர், திருபுவனம்.
5. திரு. குருநாதசர்மா, பிடில், சிதம்பரம்.
6. திரு. S. A. கோபாலன், வேய்ங்குழல், சிதம்பரம்.
7. திரு. கோ. வெங்கட்ராமன், மிருதங்கம், திருப்பனந்தாள்.

By order of His Holiness

முத்து. மெய்கண்டதேவன்,

மானேஜர், ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள்:

---

குறிப்பு: மேற்கண்ட நாளில் நிகழ்த்தப்பெறும் பிற அறங்கள்.

1. சிதம்பரத்திலும், மதுரையிலும், திருச்செந்தூரிலும் அன்னம்பாலிப்பு:
2. திருநள்ளாற்றில் ஸ்ரீதர்ப்பாரண்யேசுவரர்க்கு விசேஷ அபிஷேக ஆராதனை.
3. காஞ்சிபுரத்தில் திருவேகம்பப் பெருமானுக்கு விசேஷ புனுகு தைலாபிஷேகம், சிவாச்சாரியர்களுக்கு அன்னம்பாலிப்பு,
4. மதுரையில் ஸ்ரீசொக்கலிங்கப் பெருமானுக்குச் சந்தன மெய்ப்பூச்சு.
5. பழனியில் சாதுக்களுக்கு அன்னம்பாலிப்பு.

## "கொன்ற இன்னு" நன்று உண்டா?

புலவர். முருகு. சுவாமிநாதன் பி. லிட்., (எம். ஏ.)

உலகில் சமுதாயமாகக் கூடி வாழும் நாம் பலதிறப்பட்ட உணர்ச்சிகளையும், மனப்போக்குகளையும் கொண்ட மனிதர்களுடன் அன்றாடம் பழகவேண்டியிருக்கிறது. அவ்வாறு பழகும்போது அவர்களின் பல்வேறு மனவிகாரங் (வேறுபாடு) களைச் சந்திக்க வேண்டியிருக்கிறது. நம்மைக் காரணமின்றி விரும்புபவர்களும், வெறுப்பவர்களும், இரண்டுமின்றி இடைநிலைப்பட்ட மனநிலை உடையவர்களும் ஆகிய பலர் நம்மைச் சூழ்ந்துள்ளனர்; அவர்கள் அனைவரையும் வெறுத்து ஒதுக்கி விட்டாலோ 'உலகத்தோடு ஒத்து வாழாதான்' எனும் குற்ற மெய்தும். நெருங்கி வாழ்ந்தாலோ அதனால் எதிர்வரும் இன்னல்களைப் பொறுத்துக் கொள்ளத் தேவையான உளப்பாங்கு வேண்டும்; இவை ஒன்றுக்கொன்று மாறுபடும்போது -முரண்படும்போது-தான் சிறு சச்சரவுகளும், அதன்வழி பெரும் போராட்டங்களும் உருவாகின்றன; நாம் செய்த உதவியை உடனே மறந்து தீமையை மட்டும் எண்ணிக் காலகாலத்துக்கும் 'யானைக் கபடு' ஆக உளத்திருத்துபவர்களும் உண்டு; இவ்வாறு செய்த உதவியை மறப்பவர்களைக் கண்டு திருவள்ளுவர் வெகுண்டு,

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்று உரைப்பார். இதுபோல தினையளவாம் தீமையைச் செய்யினும் அதைப் பனையளவாகச் செய்யப்பட்டதாகக் கருதி நம்மை வெறுப்பவர்களும் உண்டு; அறியாமல் சிறிய அளவு தீங்கு செய்யும்போதே வெகுள்பவர்கள் அவர்களைக் கொல்வதைப்போன்ற பெரிய அளவு தீமையைச் செய்துவிட்டாலோ அதன் விளைவாக யாது செய்வர் என்பது சிந்திக்கவும் அரிதாகின்றது. ஆனால் வள்ளுவப் பெருந்தகை "நமக்கு முன்னொரு காலத்துச் சிறிய அளவு உதவி செய்தவர் பின் நம்மைக் கொன்றால் ஒத்த இன்னாமையைச் செய்தார் ஆயினும் அதனைப் பொறுத்து அவர் முன்செய்த நன்மையை மனத்திருத்த வேண்டும்; அவ்வாறு இருத்தினால் அவர் செய்த பெரிய தீமையும் உடனே மறையும், மன்னிக்கப்படும்" என்று அழகாக உரைப்பார். அது,

கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்றுநன் றுள்ளக் கெடும்

என்பதாகும். இதனுள் இரண்டு வரையறைகள் உள்ளன; ஒருவன் கொலை செய்தலைப் போன்ற தீமையைச் செய்ய வேண்டும்; அப்படிச் செய்பவன் முன்னொரு காலத்துக் சிறியதொரு உதவியையாவது செய்திருக்கவேண்டும்-என்பன அவை; இவையிரண்டும் அமையும் நிலையிலும் ஒருவன் தனக்குத் தீங்கு செய்தவனை மன்னிக்க வேண்டும் என மொழிகின்றார்; இவ்விடத்து 'கொன்றன்ன' 'நன்று ஒன்று' எனும் சொற்கள் மிக்க பொருளாழம் உடையவாகப் பெய்யப்பட்டுள்ளன. தீமைகள் பலவற்றுள்ளும் உயிர்க்கொலை தலையாயது; பஞ்சமாபாதகங் களுள் முதலாவதாக வைத்து எண்ணப்படுவது; பேச்சு வழக்கிலும் 'கொலைப்பழி' என மொழிதல் உண்டு. அதாவது மக்கள் தமக்கும் தம் சுற்றத்திற்கும் பிறர் செய்த எந்தவிதமான தீமையையும் மறந்து விடுவர்; ஆனால் 'கொலை' யாகிய தீச்செயல் புரிபவரை மக்கள் ஒருக் காலும் மன்னிக்க மாட்டார்கள்; எனவே அது மிகப்பெரிய கொடுஞ் செயல் என்பதை வலியுறுத்தக் கொல்லுதலையொத்த பெரியதொரு தீமையைச் செய்தாலும் எனப்பொருள்படும் 'கொன்றன்ன' என்னும் சொல்லைப் பெய்தார்.

முழு எண்களில் மிகவும் சிறியது 'ஒன்று' என்பது; அவ் வெண்ணும் பொருளாழம் உடையதாகப் பலவிடங்களில் இலக்கியத்துள் காட்டப் பட்டுள்ளது. 'ஒன்று' எனும் சொல் அவ்வெண்ணை மட்டும் உணர்த் தாமல் முழுமையும் அற்ற நிலையைக் காட்டும் இடமும் உண்டு. 'கையிலொன்றும் காணமில்லை' எனுமிடத்து அப்பொருட்டாதல் காணலாம். எனவே மிகக்குறைந்த அளவு என்பதற்காக 'ஒன்று' எனக் கூறி அக்குறைந்த அளவு நன்மையை முன்செய்தார் ஆயின் என்பார் 'ஒன்று நன்று' எனப்பகருவர். இவ்விரண்டு வரையறையினும் மாறு பட்டு அதாவது தன்னையே ஒருவன் கொலைசெய்கின்ற போதிலும், அவன் முன் எந்தவிதத்திலும் சிறியதொரு நன்மையையும் செய்திருக் காத பட்சத்திலும் அவனுடைய செயலுக்காக வெகுளாது அவனை மன்னித்துத் தன் அருளுள்ளத்தால் நன்மை செய்த அருளாளர்களை நாம் கண்டிருக்கின்றோம்; அவர்களை நாம் தெய்வமாகவே கருதலாம்.

காட்டாக, பெரிய புராணத்துள், மெய்ப் பொருள் நாயனார் புராணத்தில் மெய்ப்பொருளார் அடியார் வேடம் கொண்டு முத்த நாதன் வஞ்சகமாக உட்புகுந்து தன்னைக் குத்தித் தான் இறந்து கொண்டிருக்கும் தறுவாயிலும் அதற்காக வெகுளாது தன்னுடைய பணியாளன் தத்தனை அழைத்து,

''எம்பிரான் அடியார்போக, மீதிடை விலக்கா வண்ணம்
கொண்டுபோய் விடுநீ'' என்றார் (பெரிய-5-17)

இந்நிலையில் முத்தநாதன் மெய்ப்பொருளார்க்கு முன்செய்ததெல்லாம் பெருந்தீங்குகளேயன்றி ஒரு சிறிதும் உதவி செய்தவனல்லன்; அத்துடன் இப்போது செய்திருக்கும் தீமையோ வேறென்று ஒப்புமை காட்ட முடியாத பெரிய தீமை; இந்நிலையிலும்-சுற்றியுள்ளார் அனைவரும் முத்தநாதனைக் கொல்ல வேண்டும் என்று முன் வருகின்றநேரத்திலும்-அதனையெல்லாம் ஒதுக்கி, அவன் செய்த தீங்கினை ஒருசிறிதும் எண்ணாது, தான் இறந்து விட்டால் அவனை நமது உடன் கூட்டத்தார் கொல்வது உறுதி; என உணர்ந்து தன்னுடைய பணியாளை அழைத்து 'இவரை இடையூறின்றி ஊரெல்லையில் கொண்டு விட்டுவா' எனக் கூறுகின்றனர். அத்துடன் அவ்வாறு அடியாரைக் கொண்டு விட்டு வந்த தத்தனிடம்.

இன்றெனக்(கு) ஐயன் செய்த தியார் செய்ய வல்லார்?

எனக்கூறி அதன்பின்னரே இறையடி எய்துகின்றார்; தன்னையே கொன்ற ஒருவனை வெறுக்காது மன்னித்து அவனுக்கு இடையூறு ஏற்படா வண்ணம் வழியனுப்பிய அருட்பெருந்தகைமையைக் காணும் போது உள்ளஞ் சிலிர்க்கின்றது.

முத்தநாதன் முன் எள்ளளவு நன்மையும் செய்ததில்லை; இப்போது செய்திருப்பதோ கொலை; ஆனால் அவனை வெறுக்காது அருளும் தன்மை மலையினும் மாணப் பெரிதாகும். கொன்ற தீமை-முன் செய்த நன்று இல்லை-ஆனாலும் மன்னிப்பு-உயிர்ப்பிச்சை கிடைத்தது; இதனால் மெய்யடியார்க்குக் கிடைத்தது இறைவன் திருவடி நீழல் ஆகிய செல்வமாகும். எனவே தமக்குத் தீங்கு செய்தவரை மன்னிப்பார்க்குப் பெரும்பேறுகள் எய்தும் என்பது போதருகின்றது.

இதே போன்ற ஒருகாட்சியைப் பிறிதோரிடத்தும் காணலாம். யூதர்களின் மொழிகேட்டு மனத்தெளிவு இல்லாத மன்னன் இயேசுவைச் சிலுவையில் அறைய உத்தரவிடுகின்றான்;முள்முடியைத் தலையில் அழுத்தித் தெருவில் இழுத்துச் சென்று சிலுவையில் அறையப் புகுகின்றனர்; இந்நிலையிலும் அவர் தன் துன்பத்தை எண்ணாமல் தன்னைக் கொல்வதனால் அவர்களுக்குப் பாவம் உண்டாகி விடுமே என்று வருந்தி 'அவர்கள் செய்வது அனைத்தும்அறியாமையினால் நேர்ந்த பிழைகளே; அதனால் இறைவா! அவர்களை மன்னித்து விடு' என்று இரங்கி வேண்டிக் கொள்கின்றார்.

இங்கும் இயேசுவுக்கு யூதர்கள் சிறிதளவும் நன்மையினை முன்செய்த தில்லை; இப்போது செய்வதோ கொலையாகிய பெருந்தீமை; ஆயினும் அதற்காக அவர்களை வெறுக்காது மன்னித்து அவர்க்கிரங்கி இறைவனை வேண்டுகின்றார்:

தன்னரிய திருமேனி சதைப்புண்டு தவிப்பெய்தி
பன்னரிய பலபாடு படும்போதும் "பரிந்தெந்தாய்
இன்னதென் அறிகிலார் தாம்செய்வ திவர்பிழையை
மன்னியும்" என்றெழிற் கனிவாய் மலர்ந்தார் நம் அருள்வள்ளல்

(இரட்சண்யயாத்திரிகம்)

யூதர்கள் முன் நன்மையே செய்ததில்லை; செய்ததோ கொலை; ஆனால் மன்னித்தார்; இரங்கி வேண்டிக் கொண்டார். இதனால் இறைவனின் நேரடித்தூதரென்று உலகெல்லாம் போற்றப் பெற்றார்.

இவ்வாறு அருளாளர்கள் செய்திருக்கின்றார்கள்; சாதாரண மனிதர்கள் செய்யமுடியுமா? என வினவலாம். இவ்வாற்றான் செயற்கரிய அருஞ்செயல் புரியாவிட்டாலும் ''பிறர்பிறர் சீரெல்லாம் தூற்றிச் சிறுமை புறங்காக்க''வாவது செய்யலாமே! முயலுவோம்! வெல்லுவோம்!



# நூல் நிறை

## திருமுருகாற்றுப்படை - உரைக்கொத்து

[தொகுப்பாசிரியர்கள் :- வித்துவான் திரு. கா. ம. வேங்கடராமையா எம்.ஏ., பி. ஓ. எல். அவர்கள்; வித்துவான் திரு. வே. ரா. தெய்வசிகாமணி கவுண்டர் அவர்கள்; வெளியீடும் கிடைக்குமிடமும்; அன்னபூர்ணா பதிப்பகம்; 7, சன்னதித் தெரு, திருப்பனந்தாள்; விலை. ரூ 8-00 பக்கம் [4+14+164]

செந்தமிழின் சீராய்ந்த சங்கப்புலவர்களின் வழி தமிழகம் பெற்ற இலக்கியக் கொடைகளுள் 'திருமுருகாற்றுப்படை' ஒன்று நூல் வரிசையில் மட்டுமின்றிச் சொல், பொருட் சுவைகளிலும் முதன்மையுடையது; சங்க நூல்களில் பல்லாயிரம் அன்பர்களால் அன்றாடம் பாராயணம் செய்யப்பெறும் நூலும் இதுவேயாகும்.

இந்நூலுக்குரிய உரைகளுள் இதுவரை வெளியிடப் பெற்றுள்ள நச்சர், பரிமேலழகர், உரையாசிரியர் உரைகளுடன் வெளியிடப் பெறாத கவிப்பெருமாள், பரிதியார் ஆகியோர் செய்துள்ள உரைகளும் இணைக்கப்பெற்று ஸ்ரீ காசிமடத்து வழி வெளியிடப்பெற்ற நூலின் இரண்டாம் பதிப்பாக அன்னபூர்ணா பதிப்பகத்தின் வெளியீடாக மலர்கிறது இந்நூல்.

தமிழ், ஆங்கிலம், வடமொழி ஆகிய மும்மொழிப் புலமையும், சைவ சமய சாத்திர, தோத்திரங்களில் பயிற்சியும், ஆய்வுத்திறனும்; கல்வெட்டு, மொழிபெயர்ப்புத் துறைகளில் ஆழ்ந்த அனுபவமும், ஆத்திக அறப்பணிகளில் தோய்வும், கேட்டாரைப் பிணித்துக் கேளாரும் வேட்ப மொழியும் சொல்வன்மையும் ஆகிய இவற்றின் கூட்டு உருவமாகத் திகழும் திரு. கா. ம. வேங்கடராமையா அவர்களும், சிறந்த தமிழ்ப்புலமை, நுண்மாண் நுழைபுலம், கருத்துத் தெளிவு, தெளிந்த நீரோட்டம் போன்ற நடையழகு ஆகியனவ கைவரப்பெற்றவரோடு, வித்துவான் திரு. வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் அவர்களும் இணைந்து செயலாற்றி அரியதொரு பண்பேப்பத் தமிழ் கூறு நல்லுலகிற்குத் தந்துள்ளனர்.

அழகிய வடிவில், பொருள் முடிவுக்கேற்ற வண்ணம் மூலப்பகுதி பிரிக்கப்பட்டு ஐவருரையும் அடுத்தடுத்து அமைந்துள்ளது.

திருவருள் சிந்தனையும், தமிழ்நூற் பயிற்சியும், ஆத்திக, அறப் பணிகளுக்கு ஆக்கமளிக்கும் உள்ளமும் கொண்ட பெங்களூர் ஸ்ரீ வெங்கடேசா கல்விச் சங்கத்து நிறுவுனர் செயலர் தாளாளரு மாகிய திரு. ம.வே. ஜெயராமன் அவர்களின் பொருளுதவி கொண்டு இந்நூல் வெளியிடப் பெற்றுள்ளது.

தமிழாய்வாளர்க்கு அரியதொரு கருவூலமாக இந்நூல் திகழும் என்பது உறுதி.

## நமது உணவு

[ஆசிரியர்:- திரு தி. வை. சங்கரக்குமாரு; நலவழிக்கல்வியாளர், நெல்லை. வெளியீடும் கிடைக்குமிடமும்; திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், 79-பிரகாசம் சாலை, சென்னை-1 விலை ரூ. 4-50. பக்கம்: 14 + 2 + 86 + 2]

எண்ணிய காரியங்களை எண்ணியாங்கு ஆற்ற உள, உடல் வலிமைகள் அவசியம்; உளவலிமை ஞானநூல் பயிற்சி, வழிபாடு, தியானம் ஆகியவற்றான் அமையும். சத்துள்ள உணவை முறையறிந்து அளவுடன் உண்ண உடல் வலிமை எய்தும்.

உடல் வலிமை பெறஅனைத்து வகையான சத்துப் பொருள்களும் அடங்கிய உணவுப் பொருட்களைக் காலத்திற்கேற்ற வகையில் உண்ணுதல், உணவுவகைகள், குழந்தைகளும் நோயுற்றோரும் உண்ண வேண்டிய பொருட்கள் ஆகியவற்றை ஆசிரியர் அழகுற விளக்கியுள் ளமை அவரது அறிவுப் பெருக்கத்தைக் காட்டுவதாக அமைகிறது.

சைவ உணவில் அனைத்து வகையான சத்துப் பொருள்களும் அமைந்து எதிர்விளைவுகளைத் தூண்டாத நல்லுணவாக அது நலம் விளைப்பதைத் தெளிவாக விளக்கியுள்ளார்.

எளிய நடை, கருத்துக்களை நிரல்பட, சுவைபட மொழிதல், கருத்துவிளக்கப் படங்கள், இடத்திற்கேற்ற மேற்கோள், புள்ளி விவரங்கள் காட்டல் ஆகியவை நூலின் அழகுக்கு அழகுசெய்கின்றன.

ஆரோக்கியமான நல்வாழ்வுக்குச் சிறந்த வழிகாட்டியாக இந் நூல் அமையும் என்பதில் ஐயமில்லை.

புலவர் முருகு. சுவாமிநாதன் பி.லிட்., (எம். ஏ.)

# திருத்தல யாத்திரை

## திருவேள்விக்குடி

வித்துவான். பொன். முருகையன்

இது சோழநாட்டில் காவிரியின் வடகரையில் உள்ள தலங்களுள் ஒன்று. இவ்வூர் மாயூரம் தாலுகா குத்தாலம் நகரிலிருந்து வட கிழக்கே 2கல் தொலைவில்உள்ளது. குத்தாலத்திலிருந்தும், மாயூரத் திலிருந்தும் பேருந்து மூலம் சென்று சிறிது தொலைவு நடந்து சென்று, இத்தலத்தை அடைய லாம்.

**இறைவன் திருப்பெயர்:**
கல்யாண சுந்தரேசுவரர்.

**இறைவியின் திருப்பெயர்:**
பரிமள சுகந்த நாயகி.

**தலப்பெருமை:** இத்தலத்தைச் சிறப்பித்துப் பாடிய சைவ சமய குரவர்கள் இதனைக் காவிரியின் மறுகரையிலுள்ள திருத்துருத்தி (குத்தாலம்) யோடு சேர்த்தே பாடியுள்ளார்கள். இறைவன் பகற் காலத்தில் திருத்துருத்தியி லும், இரவில் திருவேள்விக்குடி யிலும் எழுந்தருளியிருப்பதாகப் பதிகத்தால் அறியக் கிடக்கின்றது. அது பற்றி இவ்விரு தலங்களை யும் இணைத்துப் பாடியுள்ளார்கள்.

**பதிகச் சிறப்பு:** இத்தலத்திற்கு ஞானசம்பந்தர் பாடிய பதிகம் ஒன்றும், சுந்தரர் பாடிய பதிகம் ஒன்றும் ஆக இரண்டு பதிகங்கள் உள்ளன. ''வீங்குநீர்த் துருத்தி யார் இரவிடத்துறைவர் வேள்விக் குடியே'' என்ற அடிகளால் இறை வனின் உறைவிடங்கள் புலனு கின்றது,

**கோயில் கட்டப்பெற்ற காலம்:** இக் கோயிலில் பழமை வாய்ந்த கல் வெட்டுக்கள் பல உள்ளன. இக் கோயில் முதலாம் ஆதித்த சோழ னின் மகனாகிய பராந்தக சோழன் காலத்தில் கட்டப்பெற்றது என் பது கல்வெட்டுக்களால் அறியக் கிடக்கின்றது.

**கோயிலைக் கட்டியவர்:** இக்கோயில் வாலக்கால் படை மட்டம் செய்து தாடிப் படையும் பதினான்கு கல் லும் செய்வித்தவர் திருநல்லூர்க் கச்சுவன் காடன் கெட்டியான திருவையாறு யோகி என்பவரா வார்.

**கற்கள் உதவியவர்:** கற்றளி அமைக்கக் கற்கள் உதவியவர்கள்: 1. சமிதன்

வேளான் சோழி. 2. சூலபாணி வேள் கிழவன் 3. செய்கங்கன் வீரநாராயணப் பல்லவரையன் பெண்டாட்டி குலமல்ல நாணங்கை ஆகியோராவர்.

கல்வெட்டில் இறைவன் திருப்பெயர்கள்: திருவேள்விக்குடி ஆழ்வார், மங்கல நக்கர், ஸ்ரீ கோயில் தேவர், திருவேள்விக்குடி உடையார், மணவாள நம்பி என்பன.

இறைவியின் திருப்பெயர்கள்: திருக்காம கோட்டமுண்டைய பெரிய நாச்சியார், நாறுசாந்து இளமுலை நாச்சியார் என்பன.

திருமேனிகளைச் செய்வித்தவர்கள்: இக்கோயிலிலுள்ள தெட்சிணாமூர்த்தியைச் செய்வித்தவர் காந்தரேய்சிங் என்பவர். துர்க்கையைச் செய்வித்தவர் நெற்குப்பை உடையவர் பாத்திரசேகர பல்லவரையன் என்பவர். இப்போது இக்கோயிலில் துர்க்கை (கொற்றவை) இல்லை. அந்த இடத்தில் பிட்சாடனரின் திருவுருவம் அமைந்து இருக்கிறது. துர்க்கை உருவத்தை யாரோ திருடிச்சென்ற பிறகு பிற்காலத்தில் பிட்சாடனரின் உருவம் அந்த இடத்தில் வைக்கப்பட்டமை புலனாகிறது.

ஊரமைப்பு: முதலாம் பராந்தக சோழன் காலத்தில் வடகரை குறுக்கை நாட்டுக்கு உட்பட்டதாக இவ்வூர் இருந்ததாகத் தெரிகிறது. குறுக்கை என்பது அட்ட வீரட்டங்களுள் ஒன்றாகும். இது திருவேள்விக்குடிக்கு வடகிழக்கில் ஐந்து கல் தொலைவில் உள்ளது. விசயராசேந்திரன் காலத்தில் கங்கைகொண்ட சோழ சதுர்வேதி மங்கலம் என்று வழங்கப்பட்டு, தற்போது கடலங்குடி என்ற பெயருடன் விளங்குகிறது.

சுற்றுப்புற ஊர்கள்: கல்வெட்டுக்களிலிருந்து முருக்கவேள்மங்கலம் (முருகமங்கலம்), செம்பியன் கண்டியூர், சோத்தமங்கலம், பாண்டூர், குணதலப்பாடி, ஆலங்குடி, நல்லாற்றூர் என்ற ஊர்கள் இவ்வூரைச் சுற்றியிருந்ததாகத் தெரிய வருகிறது.

பிறசெய்திகள்: திரிபுவனச் சக்ரவர்த்தி இராசராச தேவரின் 19ம் ஆட்சியாண்டில் இக்கோயிலில் உள்ள நாயன்மார்களையும், பெரிய நாச்சியார், சுப்ரமணியர், இடபதேவர், வேடுதவன நாயகர் ஆகிய உருவங்களையும் வாண கோவரையர் என்பார் எடுத்துச் சென்று திருச்சத்தி முற்றத்துக் கோயிலில் வைத்து விட்டார்களாம். இதனை அறிந்த கோயிற் சபையினர், தொண்டைமானாரிடம் முறையிடத் தொண்டைமானார் பெரு முயற்சி செய்து இவற்றை மீட்டு வந்து இக்கோயிலில் அமைத்ததாகக் கல்வெட்டால் அறியலாம்.

காவிரி நதியின் கரையில் அமைந்த சிற்றூராகிய இவ்வூர் நன்செய் நிலங்களால் சூழப் பெற்றுப் பொலிவுடன் விளங்குகிறது. மிகப் பழமையான கோயில் ஊரின் நடுவே உள்ளது. குறைந்த வருமானம் வந்தாலும், நித்ய பூஜை, நைவேத்யம் தடையின்றி நடைபெறுகிறது. தமிழ்நாடு இந்து சமய அறநிலைய ஆட்சியினரால் நன்கு பராமரிக்கப்பட்டு வருகிறது. பிரமோற்சவம் நடைபெறவில்லை. மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற முச்சிறப்புக்களையும் பெற்றது இத்திருத்தலம். திருத்துருத்தி (குத்தாலம்)யை வணங்க வருபவர்கள் அண்மையில் காவிரியின் வடகரையில் உள்ள இத்தலத்தையும் காணவருகின்றனர்.

## 41. பிரம்மவித்தின் குணவிசேஷங்கள்.

தமிழாக்கம்: கோ. வன்மீகநாதன்

மனிதர்களில் தலைசிறந்தோர் டௌவை (மெய்யைக்)கேட்கும்போது[2]
அதன்படி வாழ மிகவும் பாடுபட்டு முயல்கின்றனர்,
நடுத்தரமான மனிதர்கள் டௌவைக் கேட்கும்போது
அதை உணர்ந்தவர்களாகவும் ஆயினும்
உணராதவர்கள் போலவும் இருக்கிறார்கள்,
மிகக் கீழ்த்தரமானவர்கள் டௌவைக் கேட்கும்போது
அவர்கள் உரக்கச் சிரிக்கிறார்கள்—
அது சிரிக்கப் படாவிட்டால் அது டௌ ஆகாது.
இதனால் தான் இப்படி ஒரு சொல் வழக்கு நிலையாக நிலவுகிறது—
''எவனொருவன் டௌவைப் புரிந்து கொள்கிறானோ
அவன் மந்தமான புரிந்து கொள்ளும் ஆற்றல்
உள்ளவனாகக் காணப்படுகிறான்;
எவனொருவன் டௌவின் (ஞானத்தில்) மிக உயர்ந்த
நிலை எய்தி யுள்ளானோ அவன் கீழே
சருக்கி விழுகிறவன் போலக் காணப் படுகிறான்;
எவனொருவன் சீரான (சமமான) டௌவின் நெறியில்
செல்கின்றானோ
அவன் மேடு பள்ளங்களில் செல்பவன் போலக்
காணப்படுகின்றான்''.
மிக மேன்மையான குணம் வெறுமையான பள்ளத் தாக்குப்
போலத் தோன்றுகிறது;
தூயவெண்மை மாசுற்றது போலத் தோன்றுகிறது;
உயர்ந்த குணம் போதாக் குறையுடையது போலத்தோன்றுகிறது;
திண்மையான குணம் தள்ளாமையுற்றது போலத் தோன்றுகிறது;
தூயத் தகையை (தகுதியுடைமை) கறைப்படுத்தப்
பட்டது போலத் தோன்றுகின்றது;
பெருவெளியில் மூலைகள் இல்லை;
பெருந்திறம் முதிர்வு அடைய நெடுங்காலம் பிடிக்கிறது;
பேரிசை ஈனஒலியாகக் கேட்கப்படுகிறது;
பேருருவுக்கு மேடுபள்ள அமைப்பு இல்லை;
டௌ யாது பெயருமின்றி மறைந்திருக்கிறது.
இந்த டௌதான் தன் ஆற்றலை இரவலளிப்
பதிலும், நிறைவை, காரிய சித்தியை,
பூர்ணத்துவத்தைக் கைவரச்
செய்வதில் வித்தகனாயிருக்கிறது.

---

குறிப்பு: 1. பிரம்ம வித்—டௌவை உணர்ந்தவன் என்பது மூலம்.
2. கேட்கும்போது—''பொய்தீர் ஒழுக்க நெறி நின்றார்''
என்றார் திருவள்ளுவரும்.

சிவமயம்

# சிதம்பரச் செய்யுட் கோவை

## A String of Verses on Chidambaram
By Kumaraguruparа Swamigal
Translated into English by K. M. Venkataramiah

3. பெருவெள்ளப் பகிரண்டம் தரித்திடும்நீ பெயர்த்தும்அலை
பொருவெள்ளப் புனற்கங்கை தரித்ததும்ஓர் புகழாமே.

The flooded outer universe,
You adorn Yourself with;
The flooded Ganges with dashing waves,
You placed on Your head.
Can this be considered a celebrity?

4: மாயையினால் அனைத்துலகம் மயக்கும்நீ மாமுனிவர்
சேயிழையார் சிலர்தம்மை மயக்கியதுஓர் சிறப்பாமே.

By illusion (Maya) all worlds You captivate;
The ladies of some great sages You did fascinate.
Can this be considered a virtue?

5. மேதக்க புவனங்கள் தொலைத்திடுநீ வெகுண்டாய் போல்
மாதக்கன் பெருவேள்வி தொலைத்ததும்ஓர் வன்மையே.

Many huge worlds You dissolve !
As if You got wild,
The marvellous sacrifice of Daksha, the great,
You destroyed.
Can this be considered a strength?

6. ஓர் உருவாய் நிறைந்தநீ இருவர்க்கு அன்று உணர்வரிய
பேருருஒன்று உடையையாய் நின்றதும்ஓர் பெருமையே

In one form you permeate;
But, for being unperceptible by the two,
You took a form lofty.
Can this be considered nobility?

—அராகம்—

1. அறிவினில் அறிபவர் அறிவதை அலதுஒரு
குறியினில் அறிவுறு குறியினை அலை.

You are perceivable with the mind by the
If not, [intellectuals.
One name or form to discern,
You possess not.

2. உளவயின் உளஅளவு உணர்வதை அலதுஉரை
அளவையின் அளவிடும் அளவினை அலை.

You are perceivable with the mind to the extent it
If not, [can;
To express in the sense of words,
You are inexpressible.

3. அருஎனில் உருவமும் உளை;உரு எனின்அரு
உருவமும் உளை அவை உபயமும் அலை.

If said, You are formless,
You have form;
If said, You have form
You are form and formless.
And You are not both.

4. இலதுஎனின் உளது:உளது எனின்இலது; இலதுஉளது
அலதுஎனின் நினைதுஉரு அறிபவர்எவர்?

If said You are a nonentity,
You are existent.
If said You are existent,
You seem non existent.
If said
You are existent, non existent and neither,
Then, who can perceive Your form?

—தாழிசை—

1. எத்தொழிலும் கரணங்கள் இறந்த நினக்கு இலை ஐந்து
மெய்த்தொழில்செய் வதும்அடிகேள் விளையாட்டு நிமித்தமே;

You are devoid of the three Karanas;[1]
Hence You have no act to perform.
But yet ,Oh Lord!
You perform the five functions[2] for sports' sake.

2. சீராட்டு நினக்கு இலைச் சீராட்டும் சிறுமருங்குல்
பேராட்டி விளையாட்டு உன் பெயர்த்து ஆகி நடந்ததே.

The famous Dance you perform not,
Fondling-tenderwaist- wellknown Dame plays;
That is now being passed on in Your name.

---

1. Organs-mind, speech and body.
2. Creation, preservation, dissolution, obfuscation and deliverance.

சென்ற இதழ் தொடர்ச்சி

# திருவாசகத்துள் ஒரு வாசகம்

ச. தி. தானியேல்

''போற்றியைம் புலன்கணின்னைப்
புணர்கிலாப் புணர்க்கையானே''

—(திருச்சதகம்).

''தன்னேரில்லோன் தானேயான
தன்மை
என்னேரனையோர் கேட்க
வந்தியம்பி
யறை கூவியாட்கொண்டருளி''

—(திருவண்டப்பகுதி)

என்றெல்லாம் நமக்கெடுத்தோதி இன்புறுகின்றார்.

கனவு, நனவு, கனவற்ற உறக்கம் என்ற மூன்று நிலைகளும் மாறி மாறி வரும். அதாவது இம்மூன்று நிலைகளுக்கும் போக்குவரவு உண்டு. அன்றாட வாழ்க்கையில் அடிக்கடி நிகழும் இவை மாயா காரியங்கள்தாம். இருப்பினும் இம்மூன்று அவஸ்தைகளும் நிகழ அடிப்படை ஆதாரமாயிருக்கும் எதுவோ, அதுவே பிரமம் அல்லது பரம்பொருள். பரத்தில் உள்ள பொருள், பரமாய் இருக்கும் பொருள் இதையே பரம், அபரம், பராபரம் எனப் பலபடியாகவும் நுகர்ந்து, உணர்ந்து, அறிவால் அறிந்து பாடி மகிழ்வர் மேலோர்.

''போக்கும் வரவுமிலாப்
புண்ணியனே;''

என்பார், பின்னர்.

''வெளியிடை யொன்றாய்
விளைந்தாய் போற்றி
அளிபவருள்ளத் தமுதே
போற்றி'',

என்று போற்றி இசைக்கின்றார்.

மேற்சொன்ன மூன்று நிலைகளுக்கும் அப்பாற்பட்ட நிலையைத் துரியம் என்பர். துரியத்துக்குப் போக்குவரவு இல்லை. துரியம் மனதுக்கு அப்பாற்பட்டது. மனமோ மாயையின் சிறப்பு அம்சம். எனவே, துரியம் ... ... மாயைக்கு அப்பாற்பட்டது என்பதே சிறப்பு. இதையே மணிவாசகர்,

''மாற்றம் மனம்கழிய நின்ற மறையோன்'' என்றார். மாயைக்கு அப்பால் இருப்பது துரியம், துரியாதீதம் என் இரண்டல்ல; ஒரு பொருளே உளது.

'' துரியமு மிறந்த சுடரே
போற்றி''
என்பார்.

''ஓயாதேயுள்கு வாருள்ளிருக்கு
முள்ளானை'' —(திருவம்மானை)

என்றும்,

''ஊனாகியுயிராயுணர்வா
யென்னுட் கலந்து
தேனாயமுதமுமாய்த் தீங்கரும்
பின் கட்டியுமாய்
வானோரறியா வழியெமக்குத்
தந்தருளும்''— என்றும்

திருவம்மானையில் கூறியுள்ளார்.

இகம், பரம் என்ற இருபொருள்களையும் வேறு கண்ணோட்டத்தில் காண்போம். ஐம்பொறிகளைக் கொண்டும், அந்தக் கரணங்களைக் கொண்டும் அறிவது, நுகர்வது, நுகரப்படுவது இகம். ஆனால், ஞானக்கண் கொண்டு அறிவது, நுகர்வது, நுகரப்படுவது பரம். இகத்தையும் பரத்தையும் அதே சமயம் தரிசிக்க முடியாது, சுவைக்க முடியாது, நுகர முடியாது - காரணம், மரத்தைக் காண்பவன் ஆனையைக் காணமுடியாது; ஆனையைக் காண்பவனுக்கோ அது மரம் என்று தோன்ருது.

'' பரத்தை மறைத்தது பார்
முதற் பூதம்
பரத்தின் மறைந்தது பார்
முதற் பூதமே''
—திருமந்திரம்.

மாணிக்கவாசகர் பாடுவார்:

''வானாகி மண்ணாகி வளியாகி
யொளியாகி
யூனாகி யுயிராகி யுண்மையுமா
யின்மையுமாய்க்
கோனாகி யானெனதென்றவர
வரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயையென்
சொல்லி வாழ்த்துவனே'':

—திருச்சதகம்.

ஆகவே மறைப்பது எது? மறைப்பவை எவை? என்று ஆராயப் புகின் பரத்தை மறைப்பன மும்மலங்கள் எனப்படும் மாயை, கர்மம், ஆணவம்.

''மூலமாகிய மும்மல மறுக்குந்
தூயமேனி சுடர்விடு சோதி''

என்பார் — மணிவாசகர்.

அப்படியெனில் உலகமே மாயை என்றார்களே அதெப்படி? மாயையிற் பிறந்து, மாயையில் வளர்ந்து மாயையில் உழன்று மாயையில் முயன்று, மாயையில் முடியும் ஜீவர்களைப் பக்குவப்படுத்துகிறது இந்த மாயா உலகம். ஏன்? பரத்தைக் காணப் பக்குவம் தேவைப்படுவதால், பக்குவப்படுத்துவது எது? மாயை எனப்படும் இவ்வுலகம், உலக வாழ்க்கை. ஆயின், நல்லது செய்ய முற்பட்ட ஒன்றை மலம் எனல் எப்படி? தாயின் கர்ப்பத்தில் உருவாகும் சிசுவின் வளர்ச்சிக்கு அவ்விடம், அங்குள்ள சூழ்நிலைகள், நீர்நிலைகள் யாவும்

அமிர்தமாகுமன்றே; ஆனல் சிசு வளர்ந்து முதிர்ந்தபின் அதை வளர்த்த கர்ப்பமே சிசுவுக்கு மல மாகிறது (விஷமாகிறது) அல்லவா! எனவே மாயை எனும் தாய் ஜீவர்களை வளர்த்துப் பக்கு வப்படுத்திப் பரமனிடம் ஒப் படைக்கும் ஓர் சிறந்த தொண் டைச்செய்யும் காரணம் சிந்தித்து அறிந்து இன்புறத் தக்கதாகும். இதனை மணிவாசகர் கூறுவார்:

'' மண்ணினின் மாயை மதித்து
வகுத்த மயக்கறு மாகாதே
... ...
யென்னையுடைப்பெருமானருளீச
னெழுந்தருளப் பெறிலே''

— திருப்படையாட்சி.

மேலும் உலக வாழ்வே கர்ம சொரூபம். ஜீவர்களுடைய முன் னேற்றத்துக்குத்துணையாய் இருப் பது கர்மம். கர்மங்கள் மனம், வாக்கு, காயம் என்ற திரிகரனங் கள் வழி நிகழ்வன. தினமும் நாம் செய்யும் வேலைகள், சேவைகள், பணிகள் - அவை குடும்பத்தைப் பற்றியதாயினும் சரி, கடமை யைப் பற்றியதாயினும்சரி யாவும் கர்மமேயன்றே; அதேபோல், மனம் மொழி மெய்களால் பரம னுக்குப்புகழ் பாடுவது, பூசிப்பது, பக்தி செய்வது இவையும் கர்மத் தின்பாற்படும். பரமனிடம் லய மாகிறபோது கர்மம் முடிந்து போகிறது.

இதையே,

''எங்கு நிறைந்தமுதூறுபரஞ்சுட
ரெய்துவதாகாதே
யீறறியா மறையோ னெனையாள
வெழுந்தருளப் பெறிலே''

என்பார் திருப்படையாட்சியில்;

அங்ஙனமாயின் ஆணவத்துக்கு இங்கென்ன வேலை? இந்த ஆண வம் மிக மிகப் பழமையானது. நாம் அன்றொரு நாள் உயிர் அணு வாய் இருந்தது முதல் இந்த ஆண வம் நம்மோடுள்ள ஒரு மூல மலம்; ஜீவாத்மன் மிக நுண்ணிய உயி ராக உருவெடுத்து, பல கோடி பிறவிகளாகப்பிறந்து,பரிணமித்து வரும் வழிகளிலே, படிகளிலே, நிலைகளிலே, பிறவிகளிலே தன் ஆதி உருவான அணுத்துவத்தைப் பற்றிய அபிமானம் அதற்கு இருந்தே தீரும்; இருக்க வேண்டி யது அவசியமும் கூட. இது இயற்கை நியதி, அந்த அபி மானம், தான் யார் என்ற ஆணவம் இருப்பதால்தானே பரிணமித்துப் பரமனேடுகூட முயற்சிக்கிறது: பரத்தோடு இணையும்போது ஆணவம்அழிந்து போகிறது–கடலில்விழுந்தமழைத் துளிபோல:

'' யானகிய என்னை விழுங்கி
வெறும்
தானய் நிலை நின்றது
தற்பரமே''

என்கிறார் அருணகிரியார் தம் கந்தரனுபூதியில். இதையே மணி வாசகர்,

''கரணங்களெல்லாங் கடந்து
நின்ற கறைமிடற்றன்
சரணங்களே சென்று
சார்தலுமே தானெனக்கு
மரணம் பிறப்பென்றிவை
யிரண்டின் மயக்கறுத்த
கருணைக் கடலுக்கே
சென்றூதாய் கோத்தும்பி''

என்று திருக்கோத்தும்பியில் குறிப்பிடுகின்றார்.

எனவே பரத்தை அடையும் பக்குவமான நிலையில் உள்ள ஜீவர்களுக்கு உலகமே மும்மலமாகத் தோன்றுகிறது, என்பதே உண்மை இத்தோற்றங்களை மும்மலங்கள் அல்லது முப்டாழ் எனவும் மொழிதல் மரபு. முப்பாழுக்கும் அப்பாலாம் இறைவனை அடைய நம்மைப் பக்குவபபடுத்தும் தாய் போனறதுவே மாயை:

'' முத்தி நெறியறியாத
மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்தி நெறியறிவித்துப்
பழவினைகள் பாறும் வண்ணஞ்
சித்த மலமறுவித்துச்
சிவமாக்கி யெனையாண்ட
வத்தனெனக் கருளிய
வாறூர் பெறுவாரச்சோவே''

— அச்சோப்பதிகம்.

---

# நட்ட ராகம்

திருமுறைக் கலாநிதி, இசைநம்பி,

S. கல்யாணசுந்தர தேசிகர்.

ஸ்ரீ காசிமடம் திருமுறைப்பணி, கும்பகோணம்.

இந்த நட்டராகம் என்ற பண் 45-வது மேளமாகிய சுபபந்துவராளி என்ற இராகத்தின் ஜன்னியமாக அமைந்திருக்கிறது. நட்டராகம் என்ற பண் ராகசஞ்சாரம். ஆரோகணத்தில் ஏழு சுரங்களையும், அவரோகணத்தில் ஏழு சுரங்கள் மூர்ச்சனையும் வக்ரமாக சஞ்சாரம் வருகிறது. விபரம்:

ஆரோகணம், ஸரிகம பத நீஸ்.

அவ்ரோகணம், ஸ்நிதப மக த மகரிஸ.

என்ற கிரமம் அமைந்துள்ளது. இந்த ராகம் பாமர ரஞ்சகம் பொருந்தியது. இதனை சஞ்சாரம் செய்யும் பொழுது மிகவும் கவனமாகப் பாடவேண்டும். தவறின் சாதாரியென்ற இராகம் கலந்துவிடும். நட்டராகம்என்றதேவாரப் பாடலில் உள்ள மூர்ச்சனையைப் பாடி நிச்சயித்தால் இந்த இராகத்தின் உண்மை விளங்கும்.

நட்டராகப் பண்ணைப் பாடும்போது கவனக்குறைவு ஏற்பட்டால் அவரோகணமாகப் பாடிவரும் போது, பிரதிமத்திமம் தாண்டி, காந்தாரம், ரிஷபம், சட்ஜம் என்ற சுரங்களில் இராக சஞ்சாரம் வரும்போது சாதாரி என்ற ராகம் கலந்துவிடும். இந்த நட்டராகம், பெரும்பாலும் ஆரோகணம் ரிஷபத்தில் நின்றுவிடுகிறது. அவரோகணமாகக் காந்தார மூர்ச்சனைக்கு வந்ததும் திரும்பச் சென்று, காந்தார மூர்ச்சனையில், கமபத நீஸ்ரி. ரிஸ் நிதப மக என்ற சஞ்சாரத்துக்குள்ளாகவே பாடும்போது இந்த ராகம் நன்ருகப் பிரகாசிக்கிறது.

இந்த நட்டராகப் பண்ணை நாம் பாடவில்லையா? இந்தத் தொந்தரவு நமக்கு எதுக்கென்று சிலர் நினைக்கக் கூடும். அவ்விதம் நினைப்பது தவறு. சம்பந்தரும், சுந்தரரும் பாடியுள்ள தேவாரப் பண், நட்டராகத்தை நாம்

பாடிப் பார்ப்போமானால் அந்த ராக சஞ்சார உண்மை புலப்படும். சிந்திக்காது பாடினோமானால் பாமர ரஞ்சகம் கெட்டு விடும்.

நட்டராகம், சாதாரி என்கின்ற இந்த இரண்டு பண்களுக்குமுள்ள வித்தியாசம் தெரியாது பாடுவதே ஒரு கொடிய வழக்கமாக வருகிறது. இவை போன்ற குற்றங்கள் வராதுதடுத்து, பண்ணில் வரும் இராக சஞ்சாரத்தை ஆராய்ந்து, தெரிந்து திருமுறையாகிய தேவாரத்தில் காணும் பழந்தமிழ் இசைப்பண்களுக்குஒரு பெருமையளித்து வருதல்தான் நமது கடமை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த நட்டராகம் எப்போதும் பாடலாம். ரஞ்சகமுள்ளது.

இதன் சஞ்சாரக்ரமம்:

ஸரி கரரிஸ। ரிகம பதம கரிஸ।

ஸ்நிதமக தமகரிஸ। ஸரிகமபதநீ।

என்ற சஞ்சாரம் உள்ளது. காந்தாரம், மத்திமம், நிஷாதகம் முதலியவைகள் இராகக் கிளையை அநுசரித்து, கார்வை கொடுத்துப் பாடினால் நட்டராகக்கிளை நன்கு புலப்படும்.



சிவஞானமுனிவர் வழங்கும்

# உவமையில் பதின்மூன்று பேதங்கள்



வித்துவான்: தா. குருசாமி தேசிகர்

மாதவச்சிவஞான யோகிகள் அருளிச் செய்த சிவஞான சித்தியார் உரைப்பாயிர குருவணக்கச் செய்யுள் பதின்மூன்று உவமைகளை எடுத்துக்காட்டுகின்றது 'பிரிவரிய அத்துவிதக்கலவிகாட்டிய' நிலையை உணர்த்துகின்ற ஆசிரியர் பிரிக்க முடியாத கலப்பினைப் புலப்படுத்துகின்றார். நூல்கள் 'அத்துவிதம்' எனக் கூறும் தன்மை, சிவனும் சீவனும் பொருள் தன்மையால் இரண்டாயினும் பிரிக்க முடியாவாம் எனப்புகலும்.

பிரிக்க முடியாத இந்தக்கலப்பினை ஆன்றோர் மூன்று வகைப் படுத்தினர். அவை ஒன்றாய்நிற்றல், வேறாய்நிற்றல், உடனாய்நிற்றல் என்பர். அத்துவிதம் என்பதும் இம்மூன்றுமாய் நிற்றலே என்பதும் உணரத்தக்கது. ஒன்றாய் நிற்றல், வேறாய் நிற்றல், உடனாய் நிற்றல் ஆகிய மூன்றும் உயிர்களின் நிலைத்தல், அறிதல், அனுபவித்தல் ஆகிய மூன்றின் பயனைக் காட்டும் என்று விளக்கப்படுகின்றது.

உலகச் சமயங்கள் உணர்ந்து தெளிதற் கேற்ற வகையில், 'நான் கெட்டவாறு' அறிதற்கு; யான், எனது என்னும் செருக்கு அறுத்து நன்மை பெருகு அருள்நெறியை நண்ணுதற்கு இப்பதின்மூன்று உவமைகளையும் நுணுகி அறிதல் அறிஞர் கடனாம்.

'பிரிவரிய அத்துவிதக் கலவி' அறிதற்கு ஒன்றாய் நிற்றலின் உவமைகள் மூன்று; பண்ணிசை-பரிதிமதி (எண்ணெய்)திலதயிலம் -போல என்று விளக்கப்பட்டன. உம்மைத் தொகையாகவே ஆசிரியர் சிவஞான முனிவர் கூறியருளியதாக விளக்கப்படுகிறது,

ஒன்றாய் நிற்றல்:

1. பண்ணிசை: பண் என்பது ஒலியின் பேதம்; ஒலியைவிடப் பண் வேறன்று ஆயினும் ஒலியெல்லாம் பண்ணாகாமையின் ஒலியுமன்று இவ்வாறு ஒலியுமன்றாய் ஒலியின் பேதமேயாகிய பண் ஒலியை விட்டுத்தனித்து நில்லாதவாறு போல சிவனாகிய சித்தன்றாய் சித்தின் பேதமாகிய சீவன் சிவனை இன்றித் தனித்து நில்லாமையை உணர்த்தப் 'பண் இசை' என்றார். இதனையே, 'யானெனுந் தன்மை நினையன்றி இல்லாத் தன்மையால் வேறலேன்' எனத்தாயுமானவ சுவாமிகள் அருளிச் செய்வாராயினர்,

அப்பரடிகள் திருவையாற்றுத் திருத் தாண்டகத்தில், 'ஓசை யொலியெலாம் ஆனாய்நீயே' - என்று அருளிச் செய்ததன் உண்மையை ஆய்ந்து நோக்கும் போது சிவனுகிய சித்து இன்றிச் சீவன் தனித்து நில்லாமை யை உணர்த்தும் உண்மை புலப்படும். அவனன்றி ஓரணுவும் அசையாது என்பதும் நிலைத்தல் தன்மையைப் புலப்படுத்தும்

2. பரிதிமதி: சூரியன் ஒளியும், சந்திரன் ஒளியும் போலவும் என்று பொருள் பண்ணுமல், சூரியனுெளி யும் பகற்காலத்துச் சந்திரன் ஒளியும் போலவும் என்று பொருள் விரிக்கவேண்டும் ஒலியின் பேதமே பண் என்ருல் போல சிவபேதமே சீவன் என்னலாமோ என்பார்க்கு, சூரியன் ஒளியைவிட்டுச் சந்திர னுக்கு ஒளியில்லையாயினும் பொருளால் வேறு காணப்படு மாறுபோலச் சிவனையின்றிச்சீவன் தனித்து நிற்றல் இல்லையாயினும் பொருளால் வேறுண்டெனபது உணர்த்த வெம்பரிதிமதி என்ருர் -என்று விளக்கவுரை கூறு கின்றது.

'அருநிலைய திங்களுமாய்
ஞாயிருகி' என்றும்,

'மாலைமதியே' - என்றுப், திரு முறைகளில் ஓதப்படுவதின் நுட்பத் தினை நுணுகி நாம் ஆய்தல் வேண்டும்.

3. திலதயிலம்: என்ருல் அதனுள் ளிருக்கும் நெய்யும் போலவும், என்று விரிந்து பொருள் தரும். சூரியனும் சந்திரனும் வேறு வேறு பிரித்தறிடப்படுமாறு போல, சிவனும் சீவனும் பிரித்தறியப் படுமோ என்பார்க்கு என்னைவிட்டு வேறு பிரித்தறிய முடியாத நெய் போல், சிவனை விட்டுச் சிவனை வேறு பிரித்தறிப முடியாது என் பது உணர்த்துவதற்குத் திலதயிலம் என்ருர். எள்ளினின்றும் நெய்வேறு பிரிக்கவும் படுகிறதே எனின், நெய் உள்ளளவுந்தான் எள் எனப்படும். நெய்பிரிந்த பின் னர் எள் என்பதில்லை.

ஆக மூன்று உவமைகள் பண் ணிசை, பரிதிமதி, திலதயிலம் ஆகியவை ஒன்ருய்நிற்றலை விளக் கியது ஒன்ருய்நிற்றலில் மூன்று பேதங்கள் உள்ளன. 1. சீவன் சிவனை இன்றித்தனித்து நிலலாது என்பது 2. பொருளால்வேறுண்டு என்பதும் 3. சிவனை விட்டுச்சிவனை வேறுபிரித்தறிய முடியாது என் பதும் குறிப்பாக உணர்த்தப் பட்டன.

இனி, வேருய்நிற்றல் தன்மைக்கு மூன்று உவமைகள்; அவை:

வேருய் நிற்றல்.

1 தீ இரும்பு: தீயும் அதனுற் காய்ச்சப்பட்ட இரும்பும் போலவும் என்று விரிந்து, நெய் யை விட்டுத் திலமாகிய எள்ளுத் தனித்து நில்லாதவாறு போல,

சிவனை விட்டு உயிர் தனித்து நிற்றலில்லை எனப்பட்டு, 'அவ்வாறு தனித்து நில்லாத பொருளுக்கு அறிவிக்க' முடியாதாகுமே என்பார்க்கு, தீயினாற் காய்ச்சப்பட்ட இரும்பு, தீயேயாயினும், இரும்பின் வேறாய்த் தீ நிற்றல் காணப்படுதல் போல உயிரின் வேறாய், சிவன் நிற்பன் என்பதை உணர்த்துவதற்குத் தீ இரும்பு என்றார்.

2. பாணிஉப்பு: (நீர் உப்பு) தண்ணீரும் அதனோடு சேர்ந்த உப்பும் போலவும்' என்று விரித்து இரும்பின் வேறாய் தீ தனித்து நிற்பினும் இரும்பொடியைந்த தீ, தனித்துக் காணப்படாதவாறு போல இறைவன் வேறு காணப்படானோ என்பார்க்கு உப்போடு கூடிய நீர் உப்பேயாயினும், உப்பில்நின்றும் நீர் தனித்து நிற்கவும் படுவதுபோல இறைவனும் தனித்து நிற்பன் என்பது உணர்த்துவதற்குப் 'பாணி உப்பு' என்றார்.

3. விண்ண நிலம்: (காற்று ஆகாயம்) ஆகாயமும் காற்றும் போலவும் என்று விரிந்து, நீரைவிட்டு உப்பு ஒருகாலத்துப் பிரிந்திருப்பது போல, இறைவனை விட்டு உயிர் ஒருகாலத்துப் பிரிந்திருக்குமோ என்பார்க்குக் காற்று எக்காலத்தும் ஆகாயத்தைப் பிரிந்திராதவாறு போல உயிர் எக்காலத்தும் இறைவனை விட்டுப் பிரிந்திராது என்பதற்கு 'விண்ணநிலம்' என்றார்.

தீ இரும்பு, பாணி உப்பு, விண்ணநிலம் என்ற இம்மூன்று உவமைகளும் வேறாய் நிற்றலை விளக்கியது.

இனி, உடனாய் நிற்றல் தன்மைக்கு ஏழுஉவமைகள்; அவை உடனாய் நிற்றல்: 1. உடல் உயிர் உடலும் உயிரும் போலவும் என்று விரிந்து, காற்றுக்கு ஆகாயம் இடம் கொடுத்திருத்தலேயன்றிக் காற்றை அசையும்படி செய்வதில்லை. அதே போல உயிர்க்கு இறைவன் ஆதாரமாய் நிற்றலேயன்றி உயிரைச் செலுத்துதல் இல்லையோ என்பார்க்கு, உடல் இருத்தலுக்கு ஆதாரமாகிய உயிர் உடலை உடன் நின்று செலுத்துவதுபோல, இறைவனும் உயிருடன்நின்று செலுத்துவன் என்பதுணர்த்துவதற்கு உடல் உயிர் என்றார்.

2 நீர்நிழல்: நீரும் அதன் நிழல் போலவும் என்று விரித்து உடலை உயிர் இயக்கும் முறைமையில் சாக்கிரத்தில் தூல உடலையும், சொப்பனத்தில்தூலத்தை விட்டுச் சூக்கும உடலையும், சுழுத்தியில் தூல சூக்குமம் இரண்டையும் விட்டுக் காரண உடலையும், இயக்குவது போல இறைவன் உயிரை இயக்கும் முறையில் கூடியும் பிரிந்தும் நிற்பானோ என்பார்க்கு நீரினிடத்து நிழல் எக்காலத்தும் பிரிப்பின்றி விரவிநிற்றல் போல உயிரினிடத்து இறைவன் எக்காலத்தும் பிரிப்பின்றிவிரவி நிற்பனென்பதுணர்த்துதற்கு 'நீர்நிழல்' என்றார். (வளரும்)

❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋

# சைவ சித்தாந்தம்

❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋

சித்தாந்த சிகாமணி, அருட்பாமணி.

S. இராமலிங்கம் B. Sc., (Ag.) B. L.

சைவ சித்தாந்தத்தின் சிறப்பு என்ன என்ற கேள்வியும், எல்லா அறிஞர்களும் மகான்களும் அதை ஏற்று மிகச்சிறந்தது என்று உணர்கிறார்களே, அப்படி அதன் தத்துவங்கள்தான் என்ன என்ற கேள்வியும் எழும். அதன் சிறப்பைப் பற்றியும் அதன் தலையாய தத்து வங்கள் என்ன விதமாய் உள்ளன என்றும் பார்ப்போம்.

சைவ சித்தாந்தம், சமயங்களை நான்கு விதமாய்ப் பகுத்துணர்ந்து அந்த நான்கு சமயத்திற்கும் அப்பாற்பட்டு தனித்து நிற்கின்றது என்று பெரியோர்கள் கண்டார்கள். சமயத்தை, அகச்சமயம், அகப் புறச்சமயம், புறச்சமயம், புறப்புறச் சமயம் என்று நான்கு விதமாய்ப் பிரித்துள்ளார்கள். அகச்சமயம் என்பது சிவதத்துவங்கள் ஐந்தில் அடங்கியது. இது முப்பத்தாறு தத்துவங்களில் முதல் ஐந்தாகும். இதர மூன்று சமயங்களும் மற்ற 31 தத்துவங்களில் (வித்யாதத்துவம்7 ஆன்மதத்துவம் 24 ) அடங்கியுள்ளன.

அகத்தார் என்பது இறைவனது சமீபத்தார் என்று பொருள். புறத் தார் என்பது இறைவனை விட்டுத் தூரமாக உள்ளவர் என்று பொருள்.

இந்த சைவ சித்தாந்தமானது புறச்சமயத்தார்க்கு இருள் மய மானது. அவர்களுக்குத் தெரியாதது. அவர்களால் அறிந்து கொள்ள முடியாதது. இதைத்தான் சிவபுராணத்தில் மாணிக்க வாசக சுவாமி கள்,

''புறத்தார்க்குச் சேயோன் தன் பூங்கழல்கள் வெல்க''

என்று அருளுகிறார்.

சைவ சித்தாந்தம் அகச்சமயத்தார்க்கு ஒளிமயமானது. அகச் சமயத்தார்க்கு விளங்கும் அது புகல் அளவைக்களவானது. தர்க்க நூல்களில் சொல்லப்படும் காண்டல் (காட்சி), கருதல் (கருத்து, அனு மானம்), உரை என்னும் அளவைகளால் அளவிட்டு அறியப்படு வதாகும். ஆகவே இந்த அளவைகள் மூவகைப்படும்.

சிவஞான சித்தியார் சுபக்கம் செய்யுள் 7ல்

''அளவை காண்டல் கருதல்உரை யபாவம் பொருளொப் பாறென்பர்
அளவை மேலுமொழியுண்மை யைதிகந் தோடியல் பெனநான்
களவை காண்ப ரவையிற்றின் மேலு மறைவ ரவையெல்லாம்
அளவை காண்டல் கருதல்உரை யென்றுஇம் மூன்றி னடங்கிடுமே''

அளவை (பிரமாணமாவது) என்பது காண்டல், கருதல், உரை (ஆகமம்), அபாவம் (இன்மை), பொருள் (அருத்தாபத்தி), ஒப்பு (உவமை) என ஆறுவகைப்படும் என்பர்.

அவ்வறுவகைப் பிரமாணங்களின் மேலும் ஒழிபு (பாரிசேடம்), உண்மை (சம்பவம்), ஐதிகம் (உலகவாதம்), இயல்பு (சகசம்) என்னும் நான்கு பிரமாணமும் உண்டென்று அறிவர் கூறுவர். ஆனல் அவையெல்லாம் அளவைகளே (பிரமாணங்களே) யாகையால், காண்டல், கருதல், உரை என இம்மூன்றில் அடங்கும். ஆகவே அளவை மூவகைப்படும் என்று சொல்லப்படுகிறது.

இம்மூவகை அளவையின் இலக்கணம் என்ன என்பதைப் பார்ப்போம்.

சிவஞான சித்தியார் சுபக்கம் செய்யுள் 8-ல்

''மாசுஅறு காட்சிஐயந் திரிபுஇன்றி விகற்பம்முன்ன
ஆசு அற அறிவதுஆகும் அனுமானம் அவிநாபாவம்
பேசுறும் ஏதுக்கொண்டு மறைப்பொருள் பெறுவதாகும்
காசுஅறும் உரை இம்மானத் தடங்கிடாப் பொருளைக்காட்டும்''.

என்று மூவகையின் இலக்கணம் சொல்லப்படுகிறது.

ஒரு பொருளைச் சவிகற்பமாக (சந்தேகமின்றி) நேரே அறியும் ஆன்ம சித்சக்தியே காட்சிப் பிரமாணம். நேரே அறிய முடியாது மறைந்து நிற்கும் பொருளை, உடன் நிகழும் ஏதுவைக் கொண்டு அறியும் ஆன்ம சக்தியே அனுமானப்பிரமானம். இவ்விரண்டு பிரமாணங்களினுல் அறியப்படாத பொருளை ஆப்த வாக்கியங் கொண்டு உணரும் ஆன்ம சக்தியே ஆகமப் பிரமாணம். இதை நிர்விகற்பக் காட்சி என்பர். இக்காட்சிகளைப் பற்றிச் சிவஞான சித்தியார் சுபக்கம் செய்யுள் 9-ல்

''கண்ட பொருளை இரட்டுறவே கருதல்ஐயந் திரிபறவே
கொண்டல் திரிவுஆம் பெயர், சாதி, குணம், கன்மம், பொருள் என
ஐந்து உண்டு அவ்விகற்ப உணர்வினுக்கு பொருளின் உண்மை மாத்திரத்தின்
விண்டல் இல்லா அறிவாகும் விகற்பமில்லாக் காட்சியே''

என்று சொல்லப் படுகிறது.

ஒரு பொருளைப் பொது வகையாகக் காண்பது நிர்விகற்பக் காட்சியாகும். அதனை இன்னதென்று தெரியாது ஆராய்வது ஐயக் காட்சியாகும். அப்பொருளை மற்றொன்றாகக் கருதுவது விபரீதக் காட்சியாகும். பெயர் முதலிய வேறுபாடுகளோடு அறியும் காட்சி சவிகற்பக்காட்சியாகும். காட்சி முதலிய மூன்று பிரமாணங்களின் பாகுபாடும், பிரமேயங்களின் பாகுபாடும் என்ன என்று பார்ப்போம். சிவஞான சித்தியார் செய்யுள் 10-ல்

''காண்டல் வாயில் மனம் தன் வேதனையோடு யோகக் காட்சி என
ஈண்டு நான்காம் அனுமானம் தனக்கும் பிறர்க்கும் என்று இரண்டாம்
மாண்ட உரை தந்திரம் மந்திரத்தோடு உபதேச்சொல்
என மூன்றாம்
பூண்ட அளவைக்கு எதிர்ப்புலன் தன்னியல்பு பொது என்று
இரண்டாமே''

காட்சி இந்திரியக் காட்சி, மானதக் காட்சி, தன் வேதனைக் காட்சி, யோகக் காட்சி என நான்கு வகைப்படும். அனுமானம், தன்பொருட்டனுமானம், பிறர்பொருட்டனுமானம் என இருவகைப்படும். ஆகமம், தந்திரக்கலை, மந்திரக்கலை, உபதேசக்கலை என மூவகைப்படும். இப்பிரமாணங்களால் அறிபப்படும் பொருள்கள் சிறப்பு, பொது என இருவகைப்படும்.

சிறப்பியல்பு, பொது இயல்பு இவற்றின் இலக்கணம் என்ன என்று பார்ப்போம்.

சிவஞான சித்தியார் செய்யுள் 11-ல்
''அன்னிய சாதியும் தன்சாதியும் அகன்று நிற்றல்
தன்னியல்பு அன்னியத்தைத் தவிர்த்துத் தன் சாதிக்கு ஒத்தல்
துன்னிய பொது இயற்கை சொன்ன இவ்விரண்டினுள்ளே
மன்னிய பொருள்கள் யாவும் அடங்கி மானமுற்றால்''
என வருகிறது.

சைவசித்தாந்தத்தில் கூறப்படும் பசு பதி பாசம் என்னும் முப்பொருள்களில் பதியாகிய பொருளுக்குப் பசுவும், பாசமும் அன்னிய சாதியாம். சிவன், சதாசிவன், மகேஸ்வரன் என்னும் சத்தி பேத வடிவங்கள் மூன்றும் தன் சாதியாம். பசு, பாசங்களின் இயல்பையும் தன் சாதியாகிய சத்தி பேத வடிவங்களின் இயல்பையும் அகன்று நிற்றல் சொருபசிவம் என்னும் சிறப்பியல்பு ஆகும். பசு பாசங்களை ஒழித்துத் தனி சாதியாகிய சத்தி பேத வடிவங்களோடு சமமாய் நிற்றல் பொது இயல்பு எனப்படும்.

சென்ற இதழ்த் தொடர்ச்சி.

# திருக்கோயில்கள்

**எம். கே. பாலசுப்பிரமணியன்,**

ஐ. ஏ. எஸ்., சென்னை.

பல்லவ மன்னர்கள் கி. பி. 600—900; சோழ மன்னர்கள் கி. பி. 900—1150; பாண்டிய மன்னர்கள் கி. பி. 1100—1350; விசயநகர அரசர்கள் கி.பி. 1340-1565; மதுரை நாயக்க மன்னர்கள் கி. பி. 1600—1700 ஆகிய ஆண்டுகளில் எண்ணிறந்த கோயில்களுக்குத் திருப்பணி செய்துள்ளனர். மகாபலிபுரம், காஞ்சிபுரம், திருவண்ணாமலை, சிதம்பரம், திருவரங்கம், கும்பகோணம், தஞ்சை, மதுரை, பழனி, திருச்செந்தூர், இராமேசுவரம் முதலிய திருத்தலங்களிலுள்ள திருக்கோயில்கள், இன்றும் நாடோறும் பல்லாயிரக் கணக்கான மக்கள் சென்று வழிபடும் மாட்சி உடையவைகளாகத் திகழ்கின்றன.

நமது திருக்கோயில்கள் வரலாற்றுச் சிறப்பு மிக்கவை. அயல்நாட்டினரும் தம்மை ஈடுபடுத்திக்கொண்டு திருக்கோயில்களுக்கு நன்கொடை அளித்து வியந்து பாராட்டியுள்ளனர். நமது திருக்கோயில்கள் கட்டிடக்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை ஆகியவற்றில் சிறந்து விளங்குகின்றன. இசை, நடனம்ஆகியவற்றைஆதரித்தன. அறச்சாலைகள், நீதிமன்றம், மருத்துவச்சாலை, நிதிநிலையம், தொழில் நிறுவனம், கலைவளர் கழகம், பணிநிலையம் ஆகியவைகளாகவும் செயல்பட்டிருக்கின்றன. கல்வெட்டுகள் மூலம் பண்டைக்கால வாழ்க்கை முறைகளை அவைகள் நமக்குச் சித்தரிக்கின்றன. நமது திருக்கோயில்கள் பல தத்துவ நுட்பங்களையும் தம்மிடத்தே அடக்கியுள்ளன. இவைகளைப் பற்றிச் சிறிது ஆராய்வோம் :-

1. வரலாற்றுப் பெருஞ்சிறப்பு:

இராசசிம்ம பல்லவன் (கி. பி. 685—705) கட்டிய காஞ்சிபுரம் கயிலாசநாதர்கோயில்; இரண்டாம் பரமேசுவர வர்மன் (கி.பி. 705—710) கட்டிய வைகுண்டப் பெருமாள்கோயில்; இராசராச சோழன் (கி. பி. 985—1014) எடுப்பித்த தஞ்சைப் பெரிய கோயில்; இராசேந்திர சோழன்

(கி. பி. 1012—1044) எடுப்பித்த சங்கைகொண்ட சோழபுரம் கோயில்; இரண்டாம் இராச ராசன் (கி. பி. 1116—1164) எழுப்பிய மன்னார்குடி இராச கோபாலசுவாமி கோயில்; மூன் ரும் குலோத்துங்கன் (கி. பி. 1178 –1223) தோற்றுவித்த திரிபுவனம் கம்பகரேசுவரர்கோயில் முதலி யன எல்லையற்ற வரலாற்றுப் பெருஞ் சிறப்பு வாய்ந்தவை யாகும்.

2. அயல்நாட்டார் ஈடுபாடு:

நமது தமிழகக் கோயில்களை, அயல்நாட்டவரும் கண்டு அகம் மிக மகிழ்ந்து போற்றுகின்றனர். ஆட்சன் (Hodgson) என்ற ஆங்கி லேயர் காஞ்சிபுரம் திருவேகம் பர் கோயில் மதிலைச் செப்பனிட் டார். லியோனர்ட் பிளேசு (Leonard place) என்னும் அயல வர், மதுராந்தகம் பெருமாள் கோயிலுக்குத் திருப்பணி செய் தார். வில்லியம்காரோ (Willam garrow) என்பவர், பவானி சங்க மேசுவரர் கோயில் தேவநாயகி அம்பிகைக்குத் தந்தத்தால் செய்த ஊஞ்சல் ஒன்றை வழங்கி மகிழ்ந் துள்ளார். மதுரைக் கோயில் மீனாட்சியம்மைக்கு, ரூஸ்பீட்டர் (Rous peter) என்னும் வெள்ளை யர், தங்கத்தால் செய்த மணிகள் பதிப்பித்த அங்கவடிகளை (Stir-rups) அளித்திருக்கின்றார். உலகப் புகழ்பெற்ற சாமர்செட்மாம் (Somerset maugham) என்னும் நூலாசிரியர், தாம் மதுரைக் கோயிலைக்கண்டு வியந்து விம்மித முற்றதாகத் தம்முடைய A Writer's Note Book என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார். இத்தகைய செய்திகளால் தமிழகக் கோயில் களின் சிறப்பும் பெருமையும் புலனாகும்.

3. கட்டிடக்கலை சிற்பக்கலை:

தமிழகத்துக் கோயில்கள் பண் டைக்காலத்தில் பல்வேறு அமைப் புக்களைக் கொண்டு விளங்கின. அமைப்பு முறைகளை ஒட்டிக் கோயில்கள், பலவகைப் பெயர் களைப் பெற்றிருந்தன. ஆரூர்ப் பூங்கோயில், கடம்பூர்க் கரக் கோயில் (தேர்போல் அமைந் தவை), மீயச்சூர் இளங்கோயில் (பாலாலயம்), வைகல் மாடக் கோயில் (யானை ஏறுப்படிகள் அமைந்தவை), கருப்பறியல் கொகுடிக்கோயில் (ஒருவகை முல்லை) என்று, இன்றைக்கு ஏறத் தாழ 1300 ஆண்டுகளுக்கும் முன் னரே இருந்துவந்த பலவகைக் கோயில்களின் பெயர்களைத் திரு நாவுக்கரசர் குறிப்பிடுகின்றார்.

தமிழகக் கோயில்களின் கட்டி டக் கலைச் சிறப்பும் பெருமையும் சுமத்திரா, ஜாவா, பாலி, போர்னியோ, பர்மா, மலேசி யா, இலங்கை, இந்தோனி சியா, சயாம், கம்போடியா, சம்பா முதலிய கடல் கடந்த நாடுகளிலும் பரவி விளக்கமுற் றன. ஜாவாவிலுள்ள போரா புதூர் (கி. பி. 750—850 புத்தர்

கோயிலும், கம்போடியா — அங்கோர்காம் (கி. பி. 802 — 820) சிவன்கோயிலும், அங்கோர்வாட் (கி. பி. 1110—1150) பெருமாள் கோயிலும், தமிழகக் கோயில் கட்டிடக் கலை சிற்பக் கலைகளினுடைய வளர்ச்சியின் சிறப்பையும் பரவலையும் விளக்குவனவாகும்.

4. ஓவியமும் காவியமும்

தமிழகக் கோயில்கள் ஓவியம், காவியம் என்னும் கலைகளின் நிலைக்களமாகத் திகழ்ந்தன. மாமண்டூர்க் குகைக்கோயில் வெளிமண்டபத் தூண்களிலும், மாமல்லபுரம் ஆதிவராக மண்டபத்தில்விதானத்திலும், தஞ்சைப் பெரிய கோயிலின் கருவறை வெளிச்சுற்றுப்புறச்சுவர்களிலும், நார்த்தாமலை விசயாலய சோழீச்சுரம் கோயிலிலும், சித்தன்ன வாசல் முதலிய இடங்களிலும், ஆயிரம் ஆண்டுகட்கும் முற்பட்ட பழமைமிக்கசிறந்த அழகிய ஓவியங்கள் கண்டு களிக்கத் தக்கவை.

ஒவ்வொரு கோயிலுக்கும், அதனைச் சார்ந்த தலத்திற்கும் எனக் கோவை, உலா, தூது, மாலை, அந்தாதி முதலிய சிற்றிலக்கியங்கியங்களும், தலபுராணங்களும் போன்ற பன்னூற்றுக்கணக்கான இலக்கியச் செல்வங்களாகிய காவியங்கள் மிகப்பலவாகத் தோன்றி விளங்கி வருகின்றன.

5. இசைக்கலை:

கோயில்களில் இசைக்கலை பெரிதும் தழைத்தோங்கி வளர்ந்து வந்தது. ஆழ்வார்களும், நாயன்மார்களும் ''நாளும் இன்னிசையால்'' தமிழ் பரப்பி வந்தனர். கோயில்களில் வகைவகையான தோற்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, துளைக்கருவி ஆகிய இசைக்கலைக் கருவிகள் பயிலப் பெற்றன. குடுமியான் மலைச் சிகாநாதர் கோயிலில் உள்ள மகேந்திரவர்மனின் (கி.பி. 600-630) கல்வெட்டு, இசைக்கலை உண்மைகள் பலவற்றை அறிவிக்கின்றது. மதுரைக் கோயிலில் திருச்சுற்றின் கூத்தப்பிரான் முன்னிலையில் உள்ள தூண் ஒன்றில் 35 வகையான தாளங்கள் குறிக்கப்பெற்றுள்ளன தேவார நாயகம், தமிழ்விரகர் என்னும் பெயர்களையுடைய அலுவலர்கள் பலர், பண்டைக் காலத்தில் கோயில்களில் அரிய பல சிறந்த பணிகள் ஆற்றிவந்தனர்.

6. நடனக்கலை :

கோயில்களில் இசைத் தமிழேயன்றி, நாடகத்தமிழும் போற்றி வளர்க்கப் பெற்று வந்தது. அதைத் தழுவிவரும் நாட்டிய நாடகம், மெய்ப்பாடுகளாகிய உணர்ச்சிக்கூறுகளை வெளிப்படுத்தும் நிருத்தியம், தாளத்தை அடிப்படையாகக்கொண்ட நிருத்தம், இவற்றோடு தொடர்புடைய கவுத்துவம் முதலியன கோயில்

களில் போற்றிவளர்க்கப்பட்டன. திருவண்ணாமலை, சிதம்பரம், தஞ்சாவூர் முதலிய கோயில்களில் சிவபிரான் ஆடியருளும் தாண்டவத்தின் 108 கரண வகைகள், சிற்பமாக வடித்துத் தரப்பெற்றுள்ளன. கோயில்களில் ஆடலரங்கும், நாடகசாலைகளும் இருந்தன. இசையிலும் நாடகத்திலும் வல்ல நாடகமாராயன், சாக்கைக் கூத்தன், கானம்பாடி, வாத்திய மாராயன் முதலியோர் பலர் இருந்தனர்.

7. கல்வெட்டுக்கள்:

நம்முடைய முன்னோர்களின் வரலாற்றுச் செய்திகள், ஆட்சி முறைகள் முதலியவற்றை அறிந்து கொண்டு நாம் பயன் பெறுவதற்கும், கோயில்கள் பெரிதும் துணைபுரிகின்றன. கோயில்களில் காணப்பெறும் பல்லவர், சோழர், பாண்டியர் ஆகிய அரசர்கள் பற்பலரும் அமைத்துவந்த பல்லாயிரக் கணக்கான கல்வெட்டுக்கள், பண்டைக் காலத்தில் சமயம், சமுதாயம், வரலாறு, இலக்கியம், மக்களின், வாழ்க்கை நிலை, பழக்கவழக்கப் பண்பாடுகள் முதலியவற்றை அறிவித்து உதவும் பெருஞ்சான்று களாக நின்று நிலவுகின்றன.

உத்திரமேரூர் வைகுந்தப் பெருமாள் கோயிலின் மேற்குச் சுவரிலுள்ள முதலாம் பராந்தகசோழனின் கல்வெட்டுகள் இரண்டு (கி. பி. 919—921) இந்நாளிற் போல ஊராட்சிமுறை, வாரியங்கள், ஊராட்சித் தேர்தல்முறை, உறுப்பினர், அதற்குரிய தகுதிகள் உறுப்பினர் ஆக விரும்புபவர்கள் பால் இருக்கக்கூடாத குற்றங்கள் என்பனவற்றைப் பற்றிய செய்திகளையெல்லாம் தெளிவுற விளக்குகின்றன.

8. கலைவளர் கழகங்கள்

கோயில்களில் புராணங்கள் முதலிய இலக்கியங்களைப் படித்து விளக்கும் படனமண்டபம், நடன மண்டபம், நாடக மண்டபம், தருக்க மண்டபம் முதலியவை இருந்தன. திருவொற்றியூர்க் கோயிலில் வியாகரணதான வியாக்கியான மண்டபம் என ஒன்று இருந்ததாகக் கல்வெட்டுக் கூறுகின்றது. இவற்றிலெல்லாம் பல்வேறு கலைகளும் நூல்களும், பயிலவும் ஆராயவும் பரப்பவும் பெற்று வந்தன.

பண்டைக் காலத்தில் கோயில்கள், பல்வேறு கலைநூல்களையும் ஓலையேட்டில், எழுதிவைத்துப் பாதுகாக்கும் நூலகங்களாகவும் (Libraries) விற்றல் வாங்கல் முதலியவற்றிற்குரிய பத்திரப் பதிவுகள் செய்யும் ஆவணக் களரிகளாகவும் (Registration and Record Offices) பயன்பட்டு வந்தன. இவைகள் சரசுவதி பண்டாரம், திருக்கைக்கோட்டி என்னும் பெயர்களைப் பெற்றிருந்தன.

(வளரும்)

# நெஞ்சு விருத்தம்

தெளிவுரை:

குு. சுந்தரமூர்த்தி எம். ஏ., திருப்பனந்தாள்.

தருமச் செழுங்கிரி- அறப்பெரும் குன்று; அறவாழி அந்தணன் என்றலும் ஒன்று. ஐயம்- நல்குரவால் கையேற்று நிற்பது. காதி- அழித்து தொம் என – ஒலிக்குறிப்பு: ஓங்கார ஒலியை நினைவு படுத்து வது. உயிர் மலத்தால் கட்டுண்ட நிலையில் பல்வகைத் துன்பங்களையும் அடைதலின் அம்மலங்களை வேரறக் களைய வேண்டும் என்றார். வேர் பறித்தல்– அகழ்ந்தெடுத்தல். 'அகந்தைக் கிழங்கை அகழ்ந்தெடுக்கும்' என வரும் திருவாக்கும் காண்க. கற்றலின் பயன் உள்ளம் அடங்கவும் திருவருள் உணர்வு பெருகவுமே ஆம். அவை இரண்டும் இல்லாத கல்வி பயனிலாதலின் அதன் கரை கடந்து' என்றார். 'கற்றாரை யான் வேண் டேன் கற்பனவும் இனியமையும்' என்றும், 'பொல்லாக் கல்வி' என்றும் கூறுவதும் காண்க. பூதத்து உணர்வு- ஐம்பெரும் பூத வழி வரும் உணர்வு. அறிவுப் பொறி ஐந்தும் அருளுணர்வில் நிற்றற்கும் உரிய வாதலின் 'நீடு புகழ்' என அடை கொடுத்தார். வேட்கை- பொருள் களின் மேல் தோன்றும் பற்றுள்ளம். அவா– அவைகளைப் பெற வேண் டும் என்னும் ஆசை. தொழிற்பொறி ஐந்தும் தத்தம் தொழில் மேற்பட நைவன ஆதலின் அவை நையும் இயல்பினது என்றார். பாயுரு- எரு வாய். உபத்தம்- கருவாய். பந்தம்- சுற்றத்தொடர்பு. அது போக்கு தற்கு அரியதாகலின் 'போக்கரிய' என்றார். பல பொருள்களிலும் உயிரை ஈர்த்து ஈர்த்து அலைத்தலின் 'பரந்து அலைக்கும் அந்த மனம்' என்றார். அந்த மனம்–நெஞ்சறி சுட்டு: 'செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா அம்மலம்' என்றாற் போல. முக்குணம்– சாத்துவிகம் இராட் சதம், தாமதம். வலிமையில் ஒன்றற்கொன்று மேம்படுத்தலின் 'விறல் முக்குணம்' என்றார். விளைவு இல் புலன்- மேல் எவ்வித விளை வையும் தாராத இடம்: அஃதாவது பற்றின்மையாகிய இடம். 'பிறவாமை வேண்டாமை வேண்ட வரும்' எனத் திருவள்ளுவனார் அருளுவதும் காண்க. முட்ட- முழுமையாக. களபம்- சந்தனம்: சோதி ஒரு மூன்று- நெருப்பு கதிரன் மதியம் என்பன. சோதித்து– தத்தம் நெறியில் நிற்குமாறு பண்ணி. ஆதாரம் ஆறு மூலாதாரம் முதலியன. வாயுக்கள் பத்து உயிர்க் காற்று முதலியன. அஞ்ச வத்தை– நனவு, கனவு முதலாயின.

—ஆனந்தம்

பண்ணும் பயன்கருதி ஆகமங்கள் பார்த்துணர்ந்து
நண்ண அரிய தொரு நாடுடையான்

(தெ-ரை) இன்பமாம் பயனை விளைவிக்கும் வேதம் ஆகமங்கள் ஆகிய வற்றைப் படித்து உணர்ந்த அளவில் எய்தற்கரியதொரு நாட்டினை உடையான்.

ஈண்டு நாடு எனக் குறித்து இருப்பது இறைவனின் அருள் இருப் பாகும்: அவ்விடமே உலகிற்கும் அதன்கண் உறையும் உயிர்களுக்கும், ஆதாரமாக விளங்குவதாகும். ''அருளிற் பிறந்திட்டு அருளில் வளர்ந் திட்டு அருளில் அழிந்து இளைப்பாறி மறைந்திட்டு, அருளான ஆனந் தத்து ஆரமுதூட்டிய அருளால் என் நந்தி அகம் புகுந்தானே'' என வரும் திருமந்திரமும் இவ்வுண்மையை விளக்கும். வேதம் பொதுவும் ஆகமம் சிறப்புமாகும். இவற்றைப் படித்ததனால் மட்டும் வீட்டின் பத்தைப் பெற இயலாது; அவை கூறும் ஒழுக்க நெறியைப் பின்பற்றி நடப்பதாலேயே வீட்டின்பம் கிட்டும். ஆதலின் 'பார்த்துணர்ந்தும் நண்ணரியது' என்றார். எனினும் இவை அவ்வின்ப நெறியில் தலைப்படு தற்கு ஒருப்படுத்தலின் 'ஆனந்தம் பண்ணும் பயன்' என்றார். ஆனந் தம் பயன் பண்ணும் என மாறுக.

—எண்ணெண்

கலையால் உணர்ந்து கருத்தழிந்து காம
நிலையான தெல்லாமும் நீத்து அங்கு அலைவு அறவே
தேட்டற்ற சிந்தை சிவஞான மோனத்தால்
ஓட்டற்று வீற்றிருக்கும் ஊருடையான்

(தெ-ரை) அறுபத்து நான்கு கலைகளையும் உணர்ந்தும், அவற்றின் நெறியும் பயனும் ஒரு படித்தாய் இருத்தலின்றி வேறுவேறாய் இருத்த லின் யாது நெறியென அறிதற்கின்றிக் கருத்தழிந்து நிலையுடையது எனக் கருதிய சிற்றின்பம் முதலானவற்றையெல்லாம் நிலையற்றது எனக்கருதி அவற்றை வெறுத்து ஒதுக்கி இதுகாறும் உலகியல் பொருள் ஒவ்வொன்றையும் பற்றி அலைவுற்றிருக்கும் நிலை நீங்கித் திருவருள் உணர்வை முகக்கும் சிந்தையுடன் தேடுதல் அற்ற சிவஞானத்தை உணர்வு ஒடுங்கிய நிலையில் யாண்டும் ஓடுதல் அற்று நுகர்ந்து இருக் கும் இன்பப் பேருகிய ஊருடையான்.

கலைகள் அறுபத்து நான்கு என்பர். அவை உயிர்க்கு உணர்ச்சியை யும், உவகையையும் ஊட்ட வல்லன. அவ்வாறு ஊட்டுதலான் உயிர் இன்பமடையினும் தான் பற்றற்குரியது எதுவென்றும், அதனை எவ் வாறு பெறவேண்டும் என்றும் சொல்லவல்லனவல்ல, ஒரோவழிச் சொல்வனவும், ஒன்றுரைத்ததைப் பிறிதொன்று உரையாது மாறு

பட்டும் நிற்கும். ஆதலால் உயிர் செய்வதறியாது திகைப்புறும். ஆத லால் தான்' எண்ணெண்கலையால் உணர்ந்து கருத்தழிந்து' என்ருர்.

உலகியல் தொடர்பால் பற்றி நிற்கும் பொருள்கள் பலவேனும் சீரழிதற்குக் காரணம் காமமே என்பார், 'காமம் நிலையானதெல்லா மும்' எனக் காமத்தை முன்வைத்துக் கூறினர். ஒன்றுவிட்டுஒன்று பற்றி நிற்கும் நிலையில் உயிர் ஒருமை பெறுவதில்லை; பெருமை பெறுவது மில்லை. ஆதலின் ஒருநெறிய மனம் அமையும் பொழுதே திருவருளு டன் ஒன்று கூடுதலாகிய மோன நிலை வாய்க்கும். அந்நிலையில் விளைவ தொன்றே சிவஞானம் ஆகும். அதுதேடிப் பெறுவதன்று. உயிர் நாடிப் பெறுவதற்குரியதொன்ருகும்.

'ஓட்டற்று நின்ற உணர்வு பதிமுட்டித், தேட்டற் றிடம்சிவம் உந்தீபற,
தேடும் இடமதன்றுந்தீபற' என்னும் திருவுந்தியாரும்.

தேடுதல் + அற்ற = தேட்டற்ற, ஓடுதல் + அற்று = ஓட்டற்று.

—நாட்டத்தால்
தெண்ணீர் அருவிவிழச் சிந்தை மயக்கந் தெளிந்து
உண்ணீர்மை எய்த உரோமமெலாம்—நண்ணும்
புளகர் புனைமெய்யர் பொய்யிற் கூடாமல்
உளசம்பம் கொண்டுஉள் உருகி—அளவிலா
மாலாயிருக்கு மவர் மனத்தை வாங்க அருள்
மேலாய் விளங்குஅலங்கல் மெய்யினன்

(தெ-ரை) சிந்தையில் கொள்ளும் மயக்கம் ஏதும் இன்றி நிலையில் பொருள்களில் பற்றுச் செலுத்துதலின்றித் தெளிந்த அறிவினை யுடை யராய்த்திருவருள் நீர்மையே உளத்தில் தோன்றி முதிர அதன் பயனுக இருகண்களினும் திருவருள் இன்பத்தில் திளைத்திருக்கும் மகிழ்ச்சியால் தெளிந்த நீர் அருவியெனக் கண்ணீர் வர மயிர்க்கால்தோறும் இன்ப உணர்வு பெருகத் திருவருள் வயப்பட்டு நிற்கும் அடியவர் தம் திரு வுள்ளத்தையே தான் இருத்தற்குரிய இடமுகக்கொண்டு, அவர்களைத் தன்னின் வேருகாதவாறு உள்ளுருகச் செய்தும், எண்ணற்ற பற்றுக் கொண்டு உழலும் உயிர்களின் மனத்தைத்தடுத்து நிறுத்தி அவ்வுயிர் களின் மனத்தையும் தன் வயத்ததாக்கும் அருளையே யாவற்றுக்கும் மேலாக விளங்கும் மாலையாக அணிந்து நிற்கும் திருஉடம்பை யுடையான்.

நாட்டத்தால்- கண்களால்; சிந்தை மயக்கம் தெளிந்து பொய்யில் கூடாமல் என இயைத்து இத்தொடர்களை முன்னே கூட்டி உரைக்க. மெய்யர்க்கு மெய்யனாக விளங்கும் இறைவன் பொய்யரையும் விடுவதில்லை, அவர்கள் மனத்தையும் தன் வயத்ததாக்கி ஆட்கொள்ளும் அருள் உடையவனாக விளங்குகின்றான். அவ்வாறு கொண்டிருக்கும் அருளே அவனது மாலையாகும். அருளினும் பெரியது அகிலத்திலில்லை. ஆதலின் 'அருள் மேலோய்' என்றார். அலங்கல்— மாலை. மாலையில் நார் உள்ளும், மலர்மேலும் இருத்தல் போல இறைவனின் அருளும் யாவற்றிற்கும் காரணமாம் தன்மையில் உள்ளாகவும் அதன் விளைவாக வரும் அருட் செயல்கள் யாவர்க்கும் தெரியுமாறு மேலாகவும் விளங்கும்.

—தோலாத
வானம் புவனம் மலைகடல் ஏழ் பாதாளம்
ஊன்ஐந்து பூதத்துஉயிருணர்ச்சி- ஞானமாய்
எல்லாமாய் அல்லவாய் எண்ணுவார் எண்ணத்து
நில்லாமல் நிற்கும் நீள்வாசியான்.

(தெ-ரை) இருளுக்குத் தோற்காத விண்வெளியையும் புவனங்களையும், மலைகளையும், கடல்களையும், கீழிருக்கும் ஏழ் உலகங்களையும், உடம்புகளையும், ஐம்பெரும் பூதங்களையும், உயிர்களையும், அவற்றின் உணர்ச்சியையும், ஒற்றித்து நிற்கும் அறிவாயும், அவற்றின் வேறாயும், தன் முனைப்பால் எண்ணுவார்தம் எண்ணத்திற்கு அகப்படாதும் நிற்கும் நிலையையே குதிரையாக உடையான்.

எவற்றையும் சார்ந்தும் சாராது நிற்கும் அளவில் ஆற்றலையே குதிரையாக உடையான் என்பது கருத்து. கதிரவன் மதி ஆகிய இரு பொருள்களாலும், எஞ்ஞான்றும் விளக்கம் பெற்று இருத்தலின் விண்வெளி இருட்குத் தோலாதாயிற்று, தோலாமை- இருளால் சூழப்படாமை.

-சொல்ஆரும்
பாதாளம் ஊடுருவிப் பார்ஏழும் விண்ஏழும்
ஆதாரமாகி அகண்டம் நிறைந்து- ஓத
அரிதாய் எளிதாய் அருமறைஆறு அங்கத்து
உருவாய் உயிராய் உணர்வாய்ப்- பெரிதாய
வெய்ய துயர்ப் பாசம் அற வீசியே வெம்பிறவித்
துய்ய கடலைத் துகள்எழுப்பி- ஐயமுறும்

# திருவிளையாடற் புராணம்

## உரைநடை

ஆயிரம் வருடம் சென்றபின் மதுரையின்கண் எழுந்தருளிய [1]எண் குணத்தினனாகிய சோமசுந்தரக் கடவுள் தனது இச்சையினால் ஒப்பற்ற ஞானாசிரிய வடிவங்கொண்டு நீண்ட கற்பாறையாய்க் கிடக்கும் அப்பெண்களின் முன் வந்து தோன்றி அப்பெண்களின் வினைகெடத் திருநோக்கம் செய்தருளினார். உடனே அக்கற்பாறைகள் தாமரை, நெய்தல், காந்தள், முல்லை, ஆம்பல் முதலிய மலர்களைத் தம்மேல் பொருந்துமாறு பூத்தனபோல இயக்கிமார்கள் அறுவரும் கற்பாறை வடிவம் நீங்கி முன்னைய வடிவம் பெற்று எழுந்தார்கள். [2]பரிசவேதியில் இரும்பு தன் தன்மை கெட்டுப் பொன்னாவது போல் இறைவன் திருவருட் பார்வையால் அவர்கள் ஆணவமாகிய மாசு நீங்கித் தூய்மை அடைந்தனர்; அன்பு என்னும் ஆறு, பொறுமை என்னும் கரையைக் கடந்து இறைவனின் திருவருளாகிய கடலை அடைந்து கலத்தல்போலச் சிவபெருமான் திருவடியின்கண் வீழ்ந்து வணங்கினர். பின்னர், சிவபெருமான் அவர்களின் சிரமீது தமது திருக்கையை வைத்து[3] அட்டமாசித்திகளையும் அங்கையின்கண் வைத்த முத்தினைப்போலத் தெளிவுபட உபதேசிப்பாராயினார்.

### அட்டமாசித்திகள்

சித்திகள் அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என எட்டு வகைப்படும். இவை உள்ளத்தின்கண் அஞ்ஞானம் நீங்கிய ஞானிகளின் விளையாட்டின் வகையாகும்.

### அணிமா

மிக நுண்ணிய உயிர்கள்தோறும் தான் மிக்க சிறுமையாகிய பரமாணுவாய்ச் சென்று தங்கும் நுண்மையே அணிமாவாம்.

---

1. எண் குணம்-இவை தன் வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினின்று நீங்குதல், பேரருளுடைமை, முடிவில்லாத ஆற்றலுடைமை, வரம்பற்ற இன்பமுடைமை என்பன.

2. பரிசவேதி - இஃது இழிந்த உலோகங்களைப் பொன்னாக்கும் மருந்து ஆகும்.

3. சிரசின்மீது கையை வைத்தல் பரிச தீக்கை ஆகும்.

மகிமா

மண் தத்துவம் முதல் சிவதத்துவம் ஈருக உள்ள முப்பத்தாறு தத்துவங்களின் உள்ளும் புறமும் நீங்காது நிறைந்திருக்கும் பெருமையே மகிமாவாம்.

அறவுஞ் சிறிய உயிர்தொறுந்தான்
பரமக் காட்டை அணுவாய்ச்சென்று
உறையுஞ் சிறுமை அணிமாவாம்;
உவரி ஞால முதன்மேலென்(று)
உறையுஞ் சிவாந்தம் ஆறுறும்
உள்ளும் புறனும் அகலாதே
நிறையும் பெருமை தனைஅன்றே
மகிமா என்னும் நிரம்பியநூல்.

இலகிமா

மேருமலையின் பாரம்போலக் கனத்திருக்கும் யோகியை எடுத்தால் இலேசான பரமாணுவைப்போலக் கனமற்று இருப்பதுவே இலகிமா வாம்;

கரிமா

இலேசான பரமாணுவைப்போல் மெலிந்திருக்கும் யோகியை எடுத்தால் மேருமலையின் பாரம்போலக் கனமாக இருப்பதுவே கரிமா வாம்;

இலகு மேரு பாரம்போல்
இருக்கும் யோகி தனையெடுத்தால்
இலகு வான பரவணுப்போல்
இருப்பது இலகி மாவாம்;
இலகு வான பரவணுப்போல்
இருக்தம் யோகி தனையெடுத்தால்
இலகு மேரு பாரம்போல்
இருப்ப தன்றே கரிமாவாம்;

பிராத்தி

பாதலத்திலுள்ள ஒருவன் பிரமலோகத்தில் புகுதலும் மீண்டும் பாதலத்தை அடைதலும் பிராத்தியாம்;

பிராகாமியம்

வேறு உடலிற் புகுதலும், விண்ணில் சஞ்சரித்தலும், தான் விரும்பிய இன்பங்களனைத்தையும் தானிருக்கும் இடத்தில் நினைத்த வண்ணமே வரச்செய்தலும் பிராகாமியமாம்.

சூரியன் தனது உடலின் ஒளியால் எல்லாவற்றையும் விளங்கச் செய்தல்போல, நிலவுலகிலுள்ள பொருள்களனைத்தையும், மூன்று காலங்களையும், விண்ணுலகத்துப் பொருள்களையும் தன் உடம்பின் ஒளியினால் விளங்கச்செய்து, தான் இருந்தவிடத்திலேயே இருந்து அறிதலும் பிராகாமியம் ஆகும் என்பர்.

பிலத்தில் இருந்தோன் அயனுலகிற்
புகுதல் மீண்டும் பிலமடைதல்
பலத்தின் மிகுந்த பிராத்தியதாம்
பரகா யத்தின் நண்ணுதல்வான்
புலத்தின் இயங்கல் இச்சித்த
போகம் அனைத்தும் தானிருக்கும்
தலத்தில் நினைந்த படிவருதல்
பிராகா மியமாம்; தவக்கொடியீர்!

விண்ணில் இரவி தன்னுடம்பின்
வெயிலால் அனைத்தும் விளக்குதல்போல்
மண்ணில் உளவாம் பொருள்பலவும்
கால மூன்றும் வானத்தின்
கண்ணி லுளவாம் பொருளுந்தன்
காயத் தொளியால் இருந்தறிதல்
எண்ணில் இதுவும் மறையொருசார்
பிராகா மியம்என்(று) இயம்புமால்.

ஈசத்துவம்

சிவபெருமானைப் போல ஆக்கல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழில்களையும் தன் இச்சையின்படியே இயற்றிச் சூரியன்முதல் ஒன்பது கோள்களும் ஏவல் கேட்க வீற்றிருப்பதுவே ஈசத்துவமாம்.

வசித்துவம்

அவுணர், பறவை, விலங்கு, பூதம், மனிதர் முதலிய பல்வகை உயிர்களையும், இந்திரன் முதலிய திக்குப் பாலர் எண்மரையும் தன்வச மாகச் செய்து கொள்வதுவே வசித்துவமாம்.

ஈச னெனமுத் தொழிலுந்தன்
 இச்சை வழிசெய்(து) எழுபுரவித்
தேசன் முதற்கோள் பணிகேட்பத்
 திகழ்வ(து) ஈசத் துவமாகும்;
பூசல் அவுணர் புள்விலங்கு
 பூத மனிதர் முதலுலகும்
வாச வாதி எண்மருந்தன்
 வசமாக் கொள்கை வசித்துவமாம்.

''எம்மை யறிந்த சிவயோகியர் இச்சித்திகளை விரும்பார்கள்: ஆயினும், இச்சித்திகள் அவர்கள் உடம்பின் நிழல்போலத் தொடர்ந்து உலகினர்க்கு அவர்களின் பெருமைதனை உணர்த்தும் தகுதியை உடையன'' என்று சிவபெருமான் இயக்கியர் அறுவர்க்கும் அட்டமாசித்திகளைத் தெளிவுபட அறிவித்தருளினார்[1].

**இயக்கியர் அறுவரும் சித்திபெற்றுக் கயிலைமலை அடைதல்**

இவ்வாறு சிவபெருமான் தெளிவுபட உபதேசித்தருளிய அட்டமாசித்திகளையும், இயக்கிமார்கள் அறுவரும் உமாதேவியாரின் தியான வலியாலே நன்கு பயின்றனர்; பிறகு விண்வழியே சென்று கயிலைமலையை அடைந்தனர்.

செய்யுள் — 29
ஆகச் செய்யுள் — 1788

## 34. விடையிலச்சினையிட்ட படலம்

**காடு வெட்டிய சோழன் தன்மை**

உமாதேவியார் தழுவக்குழைந்த குறியினைக் கொண்ட ஏகம்ப நாதர் எழுந்தருளியிருக்கும் காஞ்சி நகரில் காடு வெட்டிய சோழன் என்னும் மன்னன் ஒருவன் இருந்தான். அவன் அக் காஞ்சியிலுள்ள

1. இங்கு, ''பட்டமங்கையிற் பாங்கா யிருந்தங்(கு), அட்டமா சித்தி யருளிய வதுவும்'' (திருவாசகம் கிர்த்தித் திருவகவல்) என வரும் அடிகளும், ''இத்தி தன்னின் கிழிரு மூவர்க்(கு), [அத்திக்கு] அருளிய அரசே போற்றி'' (திருவாசகம் போற்றித் திருவகவல்) என வரும் அடிகளும் உன்னற்பாலன.

காடு முற்றும் வெட்டி நகராகத் திருத்திய காரணத்தால் 'காடு வெட்டிய சோழன்' எனப் பெயர் பெற்றான். அம் மன்னன் உத்தம சிவ பத்தர்களெல்லாரினும் மிக உத்தம சிவபத்தன்; நறுமணங் கமழும் சந்தனமும் அணிகலமும் அழியும் பொருள் என்று கருதி வெள்ளிய திருநீறும், உருத்திராக்க மாலையும் அணிந்த மேனியையுடையவன்; வேதங்களும் புராணங்களும் முடிவாகக் கூறும் பொருள் சிவபெருமானே என்பதையும், அச் சிவபெருமானே மேலான உண்மைப் பொருள் என்பதையும் அளந்தறிந்த கேள்வியையுடையவன்; நான்கு வேதங்களையும், வேதாங்கம் ஆறையும் ஐயம் திரிபற ஓதியுணர்ந்தவன்; சிவ புராணங்களை நாடோறும் நியமமாகக் கேட்டு இறைவன் திருவடியின்கண் வைத்த அன்புடையவன்; மதுரைச் சொக்கலிங்கப் பெருமானின் திருவிளையாடலையும் செவியினாலே மொண்டு சுவையினையுடைய தேனும் பாலும் கலந்து உண்டு களிப்பவன்.

### சோமசுந்தரக் கடவுள் சோழன் கனவில் தோன்றியருளுதல்

காடு வெட்டிய சோழன், மதுரையில் அங்கயற்கண் அம்மையுடன் எழுந்தருளிய சோமசுந்தரக் கடவுளின் திருவடிகளைக் கண்டு தொழவேண்டுமென்னும் விருப்பம் மேன்மேலும் கொண்டு, ''நான் எப்பொழுது மதுரைப் பிரானின் திருவடிகளைக் கண்டு வணங்குவேன்?'' என்று அன்பு கூர்ந்து அப்பெருமானைச் சிந்தித்துக்கொண்டே ஒரு நாள் இரவில் நித்திரை செய்தான். அப்பொழுது வெள்ளியம்பலத்தில் ஆடியருளும் பெருமான், சித்தமூர்த்தி வடிவம் தாங்கிச் சோழனுடைய கனவின்கண் தோன்றி, ''சோழனே! நின் மனத்தின்கண் சிறிதும் அஞ்சற்க; நீ ஒருவனாய் மாறு வேடம் பூண்டு துணையின்றி இன்றே புறப்பட்டு மதுரைக்கு வந்து தரிசனஞ் செய்து கொண்டு போவாயாக'' என்று திருவாய் மலர்ந்து மறைந்தருளினார்.

### சோழன் மதுரையை நோக்கிப் புறப்பட்டுச் செல்லல்

உடனே காடு வெட்டிய சோழன், இறைவன் அருளிப்பாட்டினைக் கேட்டு விழித்துணர்ந்து மிக வியப்படைந்து சேனைகளும் அமைச்சர்களும் பிறரும் இன்றி அவ்விரவிலேயே திருவருள் துணையாய் நின்று வழிகாண்பிக்க, அன்பு என்னும் குதிரையிலேறித் [1]திருவைந்தெழுத்தென்னும் வாட்படையினைக் கொண்டு மதுரையை

1. இங்கு, ''படைக்கல மாகவுன் னாமத் தெழுத்தஞ்செ னாவிற் கொண்டேன்'' (திருநாவுக்கரசர் தேவாரம்) எனவரும் அடி சிந்திக்கற்பாலது.

நோக்கி வழிக்கொண்டான்; மலைகளும், பாலை நிலமும், பல காட்டாறுகளும், பல பெரிய ஆறுகளும், வானோங்கி நிற்கும் கரும்புகளும், செந்நெற் பயிர்களும் மிகுந்த மருத நிலங்களும் பிற்பட்டுப் புறத்தே கழிய நடந்து சென்று வையையாற்றின் கரையை அடைந்தான்.

### வையை வெள்ளத்தைக் கண்டு சோழன் உள்ளம் தளர்தல்

சோழன் அங்கு வருவதற்கு முன்னரே வையையாறு வெள்ளம் பெருகிக் கொந்தளித்து ஆரவாரித்துக் கரையை அகழ்ந்து, மரங்களை வேர்கள் அறவும் அக் கிளைகள் முறியவும் தள்ளிச் சுழன்று ஓடியது. வையையாற்றின் கரையிலே நின்று வெள்ளத்தைக் கண்ட சோழமன்னன் மனங்கலங்கி, ''சோமசுந்தரக் கடவுளைத் தரிசித்து வணங்குவதற்கு இடையூறு விளைந்ததே! நெய்கலந்த அறுசுவை உண்டியைப் பசித்தவனுக்குப் பொற்கலத்தில் இட்டிருக்க, அவன் அதனை உண்ணப்போகும் சமயத்தில் வந்து தடுத்து விலக்கிக் கண் கலங்கச் செய்பவரைப் போல இந்நதி தடுத்ததே! சூரியன் உதிக்கும் பொழுது வந்தாலோ பகைகொண்டுள்ள பாண்டியன் துன்பஞ் செய்வான்; பாண்டியனைத்தான் பகைவன் என்று கருதினேன்; இவ்வையையும் பகையாக ஆயிற்றே!'' என்று எண்ணி வருந்தினான்.

### இறைவன் சித்தராய் வந்து சோழனை அழைத்துப்போதல்

அப்பொழுது சிவபெருமான் வெள்ளத்தைக்கண்டு மனம் வருந்தும் சோழனுடைய மெலிவை நோக்கிக் கனவிலே வந்த சித்தர்போல் அவன் அருகிலே எழுந்தருளி வந்து பள்ளத்தை நோக்கி ஓடிவருகின்ற வெள்ளநீரை நோக்கி வற்றுமபடி திருநோக்கஞ் செய்தார். உடனே வெள்ளம் வற்றியது. சித்தமூர்த்திகள், அச் சோழமன்னனை அழைத்துக்கொண்டு வற்றிய வையையாற்றினைக் கடந்து சென்று வடக்கு மதில் வாயிலினைத் திறந்து உள்ளேபோய்ப் போர்வீரர்கள் நிறைந்த காவல்களையும், பல வீதிகளையும் தாண்டிப் பொற்றாமரைத் தீர்த்தத்தையும் அடைந்து அதில் சோழனை நீராடச் செய்வித்துத் தமது திருக்கோயிலுட் புகச்செய்து இந்திரவிமானத்தில் எழுந்தருளியிருக்கும் தம்மை வணங்குவித்து அதன்பின் மீனாட்சியம்மையையும் வணங்குவித்து உள்ளத்தைத் தூய்மை செய்து பேரின்பப் பெருக்கில் ஆழச்செய்தருளினார்.

### சோழமன்னன் சோமசுந்தரக்கடவுளை வணங்கித் துதித்தல்

காடுவெட்டிய சோழமன்னன் சோமசுந்தரக் கடவுளையும் மீனாட்சியம்மையையும் தரிசித்து வணங்கிப் பேரின்ப வெள்ளத்தில் மூழ்கி

நின்று, ''அடியேன் எண்ணியவற்றை எண்ணியபடியே முடிவுபெறச் செய்தவனே போற்றி! பண் அமைந்த மறைகளால் அறியப்படாத அங்கயற்கண்ணி அம்மையின் தலைவனேபோற்றி! கண்ணுவர் முதலிய முனிவர்கட்கு வேதத்தின் பொருளை அருளிச்செய்த மெய்ப்பொருளே போற்றி! விண்ணிலிருந்து இறங்கிய விமானத்தில் எழுந்தருளிய சோமசுந்தரன் என்னும் பேரழகுடையவனே போற்றி! அடியவன் முன்னுளில் [1] எண்ணிறந்த பிறவிகள் தோறும் எவ்வெவ்வுடல்கள் எடுத்தேனே அவ்வுடல்களெல்லாம் நல்வினையும் தீவினையுமாகிய அவ்விரண்டின் பொருட்டே ஆகும்; அடியேன் இப்போது தாங்கியுள்ள உடல் ஒன்றே உமது திருவடிகளுக்கு அடிமை பூண்டது; ஆதலின், ஐயனே! இந்த உடலே எனக்கு உற்ற உடலாய் நின்று பயன் 5 ;
என்று பல கூறி இறைஞ்சிப் பல வரங்களையும் வேண்டிக்கொண்டான்.

எண்ணிய வெண்ணி யாங்கே
யான்பெற முடித்தாய் போற்றி!
பண்ணியல் மறைகள் தேருப்
பான்மொழி மணுள போற்றி!
புண்ணியர் தமக்கு வேதப்
பொருளுரை பொருளே போற்றி!
விண்ணிழி விமான மேய
சுந்தர விடங்க போற்றி!

எவ்வுடல் எடுத்தேன் மேனுள்
எண்ணிலாப் பிறவி தோறும்
அவ்வுடல் எல்லாம் பாவம்
அறம்பொருட் டாக அன்றே!
தெவ்வுடல் பொடித்தாய்! உன்றன்
சேவடிக்(கு) அடிமை பூண்ட
இவ்வுடல் ஒன்றே அன்றே?
எனக்(கு)உடல் ஆனது ஐயா!

சித்தமூர்த்திகள் வடக்கு வாயிலில் இடபக்குறியிடுதல்

சோமசுந்தரக்கடவுளாகிய சித்தமூர்த்திகள் சோழனை நோக்கி, ''மன்னனே! நீ இங்கு வந்த செய்தியைப் பாண்டியன் அறிந்தால்

---

1. பிறவிகள் எண்ணிலாதன என்பதை, ''தொல்லை நம்பிறவி எண்ணில் தொடுகடல் மணலு மாற்று, எல்லைய'' என வரும் சீவக சிந்தாமணி அடிகளாலும் அறியலாம்.

உனக்குத் துன்பஞ் செய்வான்'' என்று சொல்லி, அவனை வடக்கு வாசல் வழியாக அழைத்துக் கொண்டு வையையாற்றின் வடகரை வரையுஞ் சென்று, அவன் நெற்றியிலே விபூதியைத் திரிபுண்டரமாகச் சாத்தி, ''உன்னுள்ளத்திலே நிறைந்த கருத்துக்கேற்க உனக்கு நல்லதுணை உண்டாகப் பெற்றுச் செல்லக்கடவாய்'' என்று சொல்லி அவனை வழி விடுத்துத் திரும்பிவந்து தாம் முன் திறந்த [1]வடக்குமதில் வாயிற்கதவினை மூடி அதன்கண் இடப முத்திரையை இட்டுத் தமது விண்ணிழி விமானத்தின்கண் எழுந்தருளியிருந்தார்.

**காவலர் வடக்குவாயிலில் இடபக் குறியைககண்டு ஐயுறல்**

இரவாகிய அரக்கியின் கருமையாகிய கையினைக் குறைப்பவன் போலக்கதிரவன் தன் கிரணங்களாகிய கைகளை நீட்டித் தோன்றினான். அப்பொழுது வாயில் திறப்பவர்கள் வடக்கு வாயிலின் கதவிலே இடபக்குறி பொறிக்கப்பட்டிருப்பதைக் கண்டு ஐயுற்றனர்; உடனே மற்றைய மூன்று வாயில்களினும் விரைந்து சென்று கதவுகளை உற்று நோக்கினர்; அவ்விடங்களில் தாம் நேற்றுவைத்த கயல் முத்திரை பிறழாமல் இருப்பதைக் கண்டனர்: ''இது யாதாய் விளையுமோ?'' என்று அஞ்சிக் குலபூடண பாண்டியன் முன்னே சென்று, ''அரசே போற்றி! நமது வடக்கு வாயிற் கதவின்கண் இட்டிருந்த மீனக் குறியை மாற்றி இடபக்குறியினை இட்டவர் யார் என்று அறிகிலோம்'' என்றனர். உடனே பாண்டியனும் வந்து இடபக் குறியைக் கண்டு, ''இஃது ஓர் அற்புதம்! இம் மாயையைச் செய்ய வல்லவர்யாவர்? ஒன்றும் அறிகிலேன்'' என்று ஐயங்கொண்டவனாய்த் தன் அரண்மனையை அடைந்தான். அவன் அன்று பகல் முழுவதும் உணவை நீக்கி இரவினும் உணவின்றி மலர்ப்படுக்கையை வெறுத்துக் கவலை மிகுந்தவனாய்த் தரையின்மீது படுத்து நித்திரை செய்தான்.

**பாண்டியன் கனவில் இறைவன் தோன்றி அருள்புரிதல்**

அன்றிரவு சிவபெருமான் குலபூடண பாண்டியன் கனவில் தோன்றியருளி, ''பாண்டியனே! ஆத்தி மாலையை அணிந்த சோழன், உள்ளத்தில் நிறைந்து வழிந்த அன்பினாலே காஞ்சியிலுள்ள காடெல்லாம் வெட்டி நம்மிடத்தும் பத்தியாகிய விதையை விதைத்தவன்; அவன் இங்கு வந்து நம்மை வணங்க விரும்பினான்; நாம் இந்த வடக்கு வாயிலைத் திறந்து அவனை உள்ளே அழைத்துக்கொண்டு வந்து தரிசனம் செய்வித்தோம்; பிறகு அவனை மீண்டும் அனுப்பிவிட்டுப் பின் தாழிட்டு நமது இடபக்குறியை இட்டோம்'' என்று திருவாய்மலர்ந்து மறைந்தருளினார்.

---

1. இவ்வடக்கு மதில் வாயிலுக்கு, ''இலச்சினை வாயில்'' என்றுபெயர்.